# ஸப்தகிரி

ஆகஸ்ட், 1987

விலை ரூ. 1/-



திருமலை திருப்பதி தேவஸ்தான சமய மாத இதழ்



க்ருஷ்ணோ ரக்ஷது நோ ஜகத்த்ரய குரு: க்ருஷ்ணம் நமஸ்யாம் யஹம்
க்ருஷ்ணே நாமரசத்ரவோ விநிஹதா: க்ருஷ்ணாய தஸ்மை நம:
க்ருஷ்ணாதேவ ஸமுத்திதம் ஜகதிதம் க்ருஷ்ணஸ்ய தாஸோஸ்ம்யஹம்
க்ருஷ்ணே திஷ்டதி ஸர்வமேததகிலம் ஹே க்ருஷ்ண! ஸம்ரக்ஷ மாம்.

*மூன்று லோகங்களுக்கும் தலைவனான க்ருஷ்ணன் நம்மைக் காப்பாற்றுக: நான் க்ருஷ்ணனை வணங்குகிறேன்; யாவனொரு க்ருஷ்ணனால் அஸுரர்கள் கொல்லப் பட்டார்களோ, அந்த க்ருஷ்ணனுக்கு நமஸ்காரம்; இவ்வுலக மானது கண்ணனிடமிருந்தே உண்டாயிற்று (ஆகையால்) நான் கண்ண னுக்கு அடியனாயிருக்கிறேன்; இந்த ஸமஸ்த பிரபஞ்சமும் கண்ணனிடத் தில் நிலை பெற்றிருக்கிறது. ஸ்ரீ க்ருஷ்ணனே! அடியேனைக் காத்தருள வேணும்!*

*(முகுந்தமாலை — 33)*

ஆகஸ்ட் 1987

# ஸப்தகிரி

இதழ் 3 மலர் 18

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : ஸ்ரீ கிருஷ்ணர். சித்திரம்—சசி.

2-வது : திருப்பதி ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கோவிலில் ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள்.

3-வது : கால்நடை தீவன செயற்கை உற்பத்தி நிலையத்தின் செயல்முறை விளக்கக் காட்சியின்போது.

பின்னட்டையில் : ஸ்ரீ கணபதி. சித்திரம்—ஜெகதீஷ்.

*சிறப்பாசிரியர்:*
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

*அச்சிடுபவர்:*
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

*ஆசிரியர்:*
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

*துணையாசிரியர்:*
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

கண் விழித்துக் கண் மூடும் வரை மனிதன் இம்மண்ணில் தன்னைக் காப்பாற்றிக் கொள்ளவும், தனக்காக உடைமைகளைச் சேகரித்துக் கொள்ளவும், தன் குடும்பத்தை மேம்படுத்திக் கொள்ளவுமே தன் வாழ்நாளை ஓட்டி விடுகின்றான். அன்றைய பிரச்சனைகளைத் தீர்க்க என்ன வழி மேற்கொள்ளலாம் என்று இரவு படுத்தவனுக்கு, அடுத்த நாளன்று பல புதுப்பிரச்சனைகள் அவனுக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றன. இன்னும் கூறப்போனால், கண் விழித்ததும் பால் வரவில்லையென்றால் அதுவும் ஒரு பிரச்சனையாகி ஒரு புதுப் பிரச்சனையுடனேயே அவன் துயிலெழ வேண்டியுள்ளது. ஆகவே வாழ்க்கை மேம்பாட்டிற்கு இடர் செய்யும் விஷயங்களே பிரச்சனைகள் என்பதுபோய், கீழே விழுந்தாலும், எழுந்தாலும் அவற்றையும் பிரச்சனைகளாக்கிக் கொள்ளும் வகையில் மனிதன் இன்று பலமாக பலவீனப்பட்டுள்ளான். சிந்திக்கும் திறமின்றி, எதிர்க்கும் ஆற்றலின்றி வாழ்க்கையை கண்டு அஞ்சும் அவல நிலைக்கு மனிதன் இன்று தள்ளப்பட்டிருக்கின்றான். இவற்றிலிருந்து அவன் மீள அவனுக்குத் தேவை தன்னம்பிக்கையும், தளரா முயற்சியுமேயாகும். இவை அவனிடம் விளங்க வகை செய்வன, அவன் சார்ந்திட்ட சமயங்களேயாகும்.

எல்லா சமயங்களும் மனிதன் மனிதனாக மாண்புறச் செய்யும் அறவுரைகளைத்தான் கூறுகின்றன. அவ் அறவுரைகள் யாவும் வாழ்க்கை இலக்கணங்களாக இருக்கின்றன. ஆனால் இச்சமயங்களிலிருந்து மேம்பட்டு 'வாழ்க்கை இலக்கியமாக' விளங்குவது இந்து சமயமே ஆகும். மனிதர்களுக்குரிய கடமைகள், பொறுப்புக்கள், உரிமைகள் போன்றவற்றைத் தெள்ளத் தெளிவாக விளக்கிக்கூறும் வாழ்க்கை வழி காட்டியாக விளங்குவது இந்து சமயம். பெருமை மிகு இச்சமயம் நமக்குத் தந்திட்ட பண்டிகைகள் யாவும் நமது நேரத்தை - நமது வாழ்நாளை உண்டு உறங்கிச் செலவழித்திட அல்ல. இந்து சமயமே இந்தியனின் வாழ்க்கையாக விளங்குவதால் ஒவ்வொரு இந்துப் பண்டிகையும், நமக்குக் கூறும் ஒவ்வொரு வாழ்க்கைப் பாடமாகும்.

இப்பண்டிகைகளில் முக்கியமாகக் கொண்டாடப்படுவன இறைவனின் திருஅவதார திருநாட்களாகும். 'எங்கெல்லாம் எப்போதெல்லாம் தீமைகள் பெருகி நன்மைகள் அழிக்கப்படுகின்றனவோ அங்கெல்லாம் நான் தோன்றுவேன்' என்று கீதைக் கண்ணன் அறுதியிட்டது, மனிதனுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையூட்டத்தான். அந்நம்பிக்கைக்கு உரமூட்டுவன அவ்வவதார காலங்களில் அவன் பங்கேற்று நடத்தும் நாடகக் காட்சிகளாகும்.

விதி வகுத்து முடிக்கும் வில்லாளன், அவ்விதி வழியே தான் படைத்திட்ட உயிர்களையும், ஏன் தன்னையும் கூட வழி நடத்திச் சென்ற செய்திகள் நம் வாழ்க்கையை உயர்த்திடும் படிக்கட்டுகளாகும். மனிதன் என்பவன் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அவனுக்கு இலக்கணம் கற்பித்துத் தன்னை முன்னுதாரணமாகக் கொண்டான் மாலவன் தன்னுடைய இராமாவதாரத்தின்மூலம். தீயவர்களைத் தானே தேடிச் சென்று பிரச்சனைகளைத் தானே ஏற்படுத்திக் கொண்டு, அச்சூழ்நிலையில் மனிதன் எப்படி இருக்க வேண்டும் என்று அறிவுறுத்தியது காகுத்தனின் கதை. ஆனால் இது நடந்த திரேதா யுகத்திற்கும் பின்னர் வந்த துவாபர யுகத்திற்கும் உள்ள இடைவெளி காலம் மட்டுமல்ல, மனிதர்களின் போக்கும், வாழ்க்கை நிலையும் ஆகும். துவாபர யுகத்திற்குத் தேவையாக இருந்தது பல இராமர்கள். அதற்குக் காரணம் இங்கு ராவணேஸ்வரர்களும், கூனிகளும் மலிந்திருந்ததுதான். மனிதன் எப்படி இருக்க வேண்டும் என்பதை இராமவதாரத்தில் கூறினால், கிருஷ்ணவதாரத்தில் அம்மனிதன் எப்படி வாழ வேண்டும் என்று அப்பரமன் விளக்குகிறான்.

சிறையில், நடு இரவில், அச்சத்தின் நடுவில் பிறந்து, அப்படிப்பிறந்தவுடனேயே பெற்றவரைப் பிரிந்து, ஒதுக்கிடும் இனத்தில் வளர்ந்து, தன்னைக் கணமும் மரணம் தொடரும் ஒரு நிலையில் தன்னை இருத்திக் கொண்ட பரமனின் பாகவத நிகழ்ச்சிகள், இன்று பிரச்சனைகளால் சூழப்பட்டுள்ள கலியுக மனிதன் தன்னை எவ்வகையில் கட்டுப்படுத்திக் கொண்டு, விதியை மதியால் வெல்ல வேண்டிய குறிப்பினையும் சொல்லும் அறவுரைகளாகும். பாகவதத்தில் நேரிடையாகத் தன்னை வெளிப்படுத்திக் கொண்ட கண்ணன் பாரதத்தில் தன் இறைத் தன்மையை மறைத்துக் கொண்டே, கட்டுப்படுத்திக் கொண்டே உலா வருகின்றான். மகிழ்ச்சியில் மூழ்கி விடுவதும் தவறு; துன்பத்தில் துவண்டுவிடுவதும் தவறு என்பதைச் சுட்டிக் காட்டி, வாழ்க்கையில் நெருக்கடி ஏற்படும் போது மனிதன் மேற்கொள்ள வேண்டிய நியதிகளையும், செயல்களையும் படம்பிடித்துக் காட்டுகிறான் அக்கிரிதரன்.

சமுதாயம் மேம்பட வேண்டுமென்றால், பிரச்சனைகள் தீர்க்கப்பட வேண்டுமென்றால் ஒருவன் மட்டும் நல்லவனாக, வல்லவனாக இருந்தால் மட்டும் போதாது; நல்லவர்கள் கூட வேண்டும்; நற்சிந்தனை பெருக வேண்டும் என்பதைக்கூறி, பல தீயோர்களிடையே சில நல்லோர்கள் இருந்தாலும், அவ்நல்லோர்களும் தீயோர்களாவதும், வல்லோர்கள் வீழ்வதும் ஆகிய இன்றைய கலியுக நிகழ்ச்சிகளை அன்றே தன் யுகத்தில் காட்டி, இந்நானிலம் நலம் பெற தன்னையே ஒரு பகடைக் காயாகக் கொண்டு, நமக்கு ஓர் எச்சரிக்கை விளக்காகவும், வழிகாட்டியாகவும் திகழ்ந்த அம்மாலவனை, எதிர்வரும் 'கிருஷ்ண ஜயந்தி' அன்று பணிந்தேத்தி உய்வடைவோமாக!

# செய்திச் சுருக்கம்

**திருப்பதியில் காஞ்சி சங்கராசார்யார் :**

காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசார்யர் தவத்திரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் 2-7-87 அன்று திருப்பதிக்கு வருகை புரிந்தார். அன்று மதியம் திருப்பதி ஸ்ரீ தியாக ராஜ மண்டபத்தில் பூசைகள் சில நடத்தினர். பின்னர் அன்று மாலை திருமலைக்கு வருகை புரிந்தார். மூன்று நாட்களுக்குத் திருமலைக் கோயில் மூலவர் முன் சுமார் அரை மணி நேரம் தியானத்தை மேற்கொண்டார். பின்னர் அவர் திருமலையில் பேசுகையில் இன்று பாரதத்தில் நிலவும் அமைதியின்மைக்கும், வன்முறைக்கும் காரணம் மக்களிடையே விளங்கும் நாட்டுப்பற்றின்மை, மட்டமான அரசியல் போக்கு, இந்திய அரசியல் அமைப்பின் சில குறைபாடுகள் ஆகியனவாகும் என்று குறிப்பிட்டார். பின்னர் திருமலையில் இரண்டு நாட்கள் நடைபெற்ற வேதம் மற்றும் ஆகமம் பற்றிய பயிற்சி வகுப்பில் பங்கேற்ற 40 பயிற்சியாளர்களுக்குச் சான்றிதழ்களை ஸ்ரீசுவாமிகள் வழங்கினர்.

**ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் :**

மொரீஷியஸ் தீவுகளின் உதவிப் பிரதமரும் மற்றும் நிதி அமைச்சருமான திரு. லக்ஷ்மணசிங் திருமலைக் கோயிலுக்கு அண்மையில் வருகை புரிந்தார். பிறகு மொரீஷியஸ் தீவில் புதியதாக ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில் கட்டப்பட உள்ளதாகவும், அதற்குக் கடவுளர்களின் திருவுருவச் சிலைகளை வழங்குமாறு அவர் தி. தி. தேவஸ்தான மேலாண்மையைக் கேட்டுக் கொண்டார். இது சம்பந்தமாக தகுந்த முயற்சிகள் மேற்கொள்ளப் படும் என்று தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. எஸ். விஸ்வநாத் ஐ. ஏ. எஸ். அவர்கள் அமைச்சருக்கு உறுதி அளித்தார்.

**மற்றைய செய்திகள் :**

தி. தி. தேவஸ்தானத்தின் நிருவாக சீரமைப்பின்கீழ், நிருவாகம் சம்பந்தப்பட்ட அலுவல்கள் விரைவாகவும் திறமையோடும் செயல்படும் வகையில் தி. தி. தே. பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்கள் பங்கேற்கும் வகையில் கீழ்வரும்படியான நான்கு உதவிக் குழுக்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

**நிருவாகக் குழு :**

(1) தலைவர் (டி. சீதாராமய்யா), (2) திரு. சி. ஆனந்தராவ், (3) திரு, எஸ். சத்யநாராயணராவ், (4) ஆணையர், அறநிலையத்துறை (ஆ. பி.) (5) செயலாட்சித் தலைவர் (தி. தி. தே.) —உறுப்பினர் செயலர்.

**நிதிக் குழு :**

(1) தலைவர், (2) திரு. சி. ஆனந்தராவ், (3) திரு. பி. இராமசந்திர ராஜு, (4) ஆணையர், அறநிலையத் துறை, (5) செயலாட்சித் தலைவர்-உறுப்பினர் செயலர்.

**கல்விக் குழு :**

(1) தலைவர், (2) திரு. ஐ. எல். என். சாஸ்திரி, (3) டாக்டர். என். தேவநாதன், (4) திருமதி. வரத சரோஜா, (5) செயலாட்சித் தலைவர்-உறுப்பினர் செயலர்.

**பணிமுறை மற்றும் கொள்வினைக் குழு :**

(1) தலைவர், (2) ஆணையர், அறநிலையத்துறை, (3) திரு. ஜி. நாகி ரெட்டி, (4) திரு. எல். வி. ராமய்யா, (5) திரு. யு. கிருஷ்ணராவ், (6) செயலாட்சித் தலைவர் — உறுப்பினர் செயலர்.

ஃ ஃ ஃ

திருப்பதியில் இருக்கும் தி. தி. தேவஸ்தானத்தின் ஸ்ரீ வேங்கடேஸ்வரா நாதஸ்வர இசைப் பள்ளியில் பயிலும் வெளியூர் மாணவர்களுக்கு வழங்கப்படும் உதவித் தொகை ரூ. 75/-லிருந்து ரூ. 100/- ஆக உயர்த்தப்பட்டுள்ளது.

ஃ ஃ ஃ

தி. தி. தேவஸ்தானத்தாரின் இந்து தர்ம ரக்ஷண சமஸ்தா எனும் இயக்கம் 1-7-87 முதற்கொண்டு "தர்ம பிரசார பரிஷத்' என்று பெயரில் செயற்படும். இவ்இயக்கத்தின் நிருவாகக் குழு உறுப்பினர்களாக திரு. ஐ. எல். என். சாஸ்திரி, எஸ். சத்ய நாராயண ராவ் மற்றும் திருமதி, வரத சரோஜா ஆகியோர் நியமிக்கப்பட்டுள்ளனர்.

ஃ ஃ ஃ

**செயற்கை வளர்ப்புத் தீவனம் :**

குறைந்த இடத்தில், எளிமையான முறையில், குறுகிய காலத்தில் அதிக தண்ணீர் விரயமின்றிக் கடின உழைப்பு இல்லாத வகையில், அதிக ஊட்டச் சத்துமிக்கு விளங்கும் வகையில் கால் நடைகளுக்கான தீவனத்தைச் செயற்கை முறையில் பயிர் செய்யும் வகையில் 'நடமாடும் தீவன உற்பத்தி நிலையம்' ஒன்று ஆந்திர மாநிலத்தில் முதன் முறையாக அறிமுகப்படுத்தும்வகையில் திருப்பதியில் தி.தி.தேவஸ்தான மாட்டுப் பண்ணையில் செய்முறைவிளக்கமாக 23-6-87 முதற் கொண்டு செயல்படுத்தப் பட்டுள்ளது. அமெரிக்காவைச் சார்ந்த திரு. ஜான் ரிச்சார்டு பிராடி என்பவர் மூன்றுண்டுகளுக்கு முன்பு இந்நிலையத்தினைக் கண்டு பிடித்தார். இந்நிலையத்தினை ஹாலண்டு நாடு உற்பத்தி செய்து வருகின்றது. இந்நிலையத்தில் பார்லி, வோட்ஸ், புல்லரிசி போன்ற தீவனங்களை எட்டு நாட்களுக்கு முழு வளர்ச்சி அடையச் செய்து, தினமும் அறுவடை செய்யலாம். இந்நிலையக் கூடத்தில் 672,தட்டுக்களில் 150 கி. விதைகளைப் பயிரிட்டால்,தினமும் 1 டன் எடையுள்ள புல்லை அறுவடை செய்யலாம். இதனைக் கொண்டு 50 பசுக்களுக்குத் தீவனம் கொடுக்கலாம். இந்நிலையம் ரூ. 5 இலட்சம் மதிப்பாகும். விரைவில் இது போன்ற சில நிலையங்களை தி. தி. தே. வாங்கக் கூடும் என எதிர்பார்க்கப்படுகிறது.

*

# ஐங்கரத்தின் மகிமை



முன்னுரை :

இந்தியாவில் தோன்றியுள்ள மதங்கள் அனைத்துக்கும் பொதுவாய் எழுந்தருளியிருக்கும் தெய்வம் கணபதி. எனவே, அவர் முழு முதற்கடவுள் என அழைக்கப்படுகிறார். அம் முதற்கடவுளை அறியாதவர் யாரும் இலர். அம் முதற்கடவுளுக்கு "ஐந்து கரம்" உடையதும் யாவரும் அறிந்ததே. அவ்வைந்து கரங்களின் திருச்செயல்களை இங்குக் காண்போம்.

ஐந்து கரம் :

விநாயகருக்குப் பல நாமங்கள் உண்டு. அதில் ஒன்று "ஐங்கரன்". ஐந்து கரம் உடையதால் இவர் அவ்வாறு அழைக்கப்படுகிறார். விநாயகருக்கு ஐந்து கரம் உள்ளதைப் பின்வரும் பாடல் தெளிவுபடுத்துகிறது.

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின்றேனே.

ஐங்கர மஹிமை :

ஐந்து கரங்கள் உடையவராக ஆனை முகக்கடவுள் இருக்கிறார். பொதுவாக தெய்வ சொரூபங்களுக்கு நான்கு கரங்கள் இருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. ஆற்றலிலே மானுடரைவிட அவர்கள் மிக்கார் என்பதைப் பல கைகள் படைத்திருப்பதன் மூலம் அவர்கள் காட்டியருள்கின்றனர். தும்பிக்கையுட்படக் கணபதிக்கு ஐந்து கரங்கள் இருக்கின்றன.

உயர்த்திப் பிடித்திருக்கும் ரண்டு கைகளிலே கணபதி அங்குச , பாசம் என்னும் இரண்டு ஆயுதங்களை ஏந்தியுள்ளார். இது நமக்கு மாபெரும் தத்துவத்தை உணர்த்துகிறது.

யானைப் பாகன் அங்குசத்தைக் கொண்டு யானையை வேண்டியவாறு நடத்துகிறான். இதே போல் கணபதியும் ஜீவர்களை-மானுடங்களை-நம்மை-நல்வழியில் நடத்துகிறார் என்னும் தத்துவத்தை உணர்த்துகிறது.

வேலையில்லாதபோது யானைப் பாகன் கயிறு அல்லது பாசத்தைக் கொண்டு அதை கட்டி வைத்துவிடுகிறான். இதே போல், கணபதியும், தீவினையாளரை அவன் பாசத்தைக் கொண்டு களைகிறார் என்பதை இடது கையில் உள்ள 'பாசம்' உணர்த்துகிறது.

நாம் படும் துன்பத்திற்கெல்லாம் காரணம் நாம் தீவினையில், அஞ்ஞானத்தில் வீழ்ந்து கிடப்பதே. ஞானம் உடைய-ஆலோசனை புத்தி உடைய கணபதிதான் நம்மை மேற்கண்ட இரண்டு செயல்களிலிருந்து காப்பாற்றுகிறார் என்பதை, வலது கையில் உடைய 'அங்குசம்', இடது கையில் உடைய 'பாசமும்' உணர்த்துகின்றன. அதாவது தடைகளினின்று நல்லாரைத் தவிர்ப்பது ஒன்று. தடைகளைக் கெட்டவர்களுக்கு அதிகப்படுத்திவிடுவது மற்றொன்று.

ஏகதந்தன் :

இன்னும் இரண்டு கைகளில் முறையே, அதாவது வலது கரத்தில் ஒடிந்த தந்தமும், இடது கரத்தில் அக்ஷமாலையும் வைத்திருக்கிறார்.

இவை இரண்டும் இருவேறு தத்துவங்களை விளக்குகின்றன.

இடது கையில் உள்ள அக்ஷமாலை, சிந்தனை சக்தியை வளர்ப்பது அவசியம் என்பதை உணர்த்துகிறது. அக்ஷமாலையை ஜபமாலை என்றும் அழைப்பர்.

---

திரு. சி. கிருஷ்ணகுமார்,
கலவை

---

யார் ஒருவன் எண்ணவும், எழுதவும் கற்றுக்கொள்கிறானோ அவனே நல்ல மனிதன்-உயர்ந்த மனிதன் ஆகிறான். எண்ணும் எழுத்தும் கண் எனத்தகும் என்னும் கோட்பாட்டைக் கணபதி காட்டிக்கொண்டிருக்கிறார். அறிவை வளர்க்க விரும்புபவர்கள் - சிந்தனை - சக்தியை, ஆலோசனை புத்தியை-அதிகரிக்க விரும்புபவர்கள்

ஆனை முகக்கடவுளாகிய கணபதியை ஆராதிக்க வேண்டும். இவ்வளவு பெரிய உயர்ந்த தத்துவத்தை விளக்குகிறது இத்திருக்கரம். வலது திருக்கரத்தில், தனது இரண்டு தந்தங்களில் ஒன்றை - வலதுபுற தந்தத்தை - ஒடித்து எழுது கோலாகக் கணபதி வைத்திருக்கிறார். இத்திருக்கரம் மிகப்பெரிய கதையைக் கொண்டுள்ளது என்றாலும், பெரிய தத்துவத்தையும் விளக்குகிறது.

தனது இரண்டு தந்தங்களில் ஒன்றை ஒடித்துள்ளதால், ஒரு தந்தம் மட்டும் கொண்டுள்ளார். இது கொண்டே இவருக்கு 'ஏகதந்தன்' என்ற திருப்பெயர் ஏற்பட்டது. (ஏகம்-ஒன்று) கணபதி தன் உடல் உறுப்பு ஒன்றை உடைத்தால்கூட அவருக்கு ஒரு திருப்பெயர் ஏற்பட்டு விடுகிறது.

ஒலி வடிவை முதன் முதலில் வரி வடிவாக எழுத்து வடிவமாக ஆக்கியவர் கணபதியே என்ற உயர்ந்த தத்துவத்தை விளக்குகிறது, இவரது வலது கரம் பிடித்துள்ள தந்தம். இது மட்டுமன்று; 'உலகின் முதல் எழுத்தாளர் கணபதியே' என்ற சிறந்த தத்துவத்தை விளக்குகிறது. எனவே தான் நாம் (ஹிந்துவாகிய நாம்) எதை எழுதினாலும், முதல் எழுத்தாளர் கணபதிக்கு நன்றி செலுத்தும் வகையிலே, 'பிள்ளையார் சுழி' போட்டு எதையும் எழுதத் துவங்குகிறோம்.

இது மட்டுமன்று, வியாசபகவான் மகாபாரதத்தைச் சொல்லிக் கொண்டு போகையில் கணபதி அதை எழுதி முடித்ததாக ஓர் ஐதிகம் உள்ளது. எழுதிக் கொண்டிருக்கையில் எழுத்தாணி உடைந்து போய் விட்டது. அதனால் எழுதும் வேலையை நிறுத்துவது ஒண்ணாது. ஆலோசனை புத்தி அதிகம் உடைய கணபதி-சிந்தனை சக்தி அதிகம் உடைய கணபதி - உடனே தனது தந்தங்களில் ஒன்றை ஒடித்து அவ்வேலையை செய்து முடித்தார். அன்று முதல் அவர் 'ஏகதந்தன்' ஆகிவிட்டார். தனது உருவத்துக்கு ஊனம் வந்தது. ஒடித்தெடுத்த தந்தத்தை தனது வலது கையில் பிடித்திருக்கிறார். இது தியாகத்தின் அடையாளமாகும். ஒரு நல்ல காரியத்தின் பொருட்டுத் தன்னிடம் இருக்கும் சிறந்தது ஒன்றைத் தியாகம் பண்ணாதவன் செயற்கரியதைச் செய்து சாதிக்க முடியாது. தனக்கு உரியதைப் பொது மக்களுக்கு உரியதாக்கும் முறையில் தியாகம் செய்யாது யாரும் மேலோர் ஆனது கிடையாது. ஓர் உயர்ந்த காரியத்தின் பொருட்டுத் தனது அவயவங்களில் ஒன்றை இழந்துவிட்டதே கணபதிக்கு அலங்காரமாயிற்று.

இந்த நான்கு கரங்களும் சேர்ந்து விநாயகருக்கு ஒரு திருப்பெயரைத் தேடித் தந்தன. அப்பெயர் என்னவென்றால் 'சதுர்புஜர்' ஆகும்.

இவ்வளவு பெரிய உயர்ந்த தத்துவங்களை கொண்டுள்ளது இந்த நான்கு கரங்களும்.

**தும்பிக்கை :**

விநாயகருடைய ஐந்தாவது கரம் தும்பிக்கை ஆகும். இது துதிக்கை என்றும் அழைக்கப்படுகிறது. தும்பி என்றால் யானை என்று பொருள். எனவே இக்கரம் தும்பிக்கை என அழைக்கப்படுகிறது. இக்கரத்திற்கு பல சிறப்புகள் உண்டு.

ஐந்தாவது கரமாகிய தும்பிக்கையில் அவர் தனக்கு மிகவும் பிடித்தமான 'மோதகம்' (கொழுக்கட்டை) என்னும் தின்பண்டத்தை வைத்திருக்கிறார். இதுதான் உயர்ந்த மாபெரும் தத்துவத்தை விளக்குகிறது.

உணவு இல்லாது யாரும் உயிர் வாழ முடியாது. நல்லுணவை உண்டு உயிர் வாழவும், அறிவைப் பெருக்கவும், நல்வாழ்வு வாழவும் மனிதன் கற்றுக்கொள்ள வேண்டும் என்னும் கோட்பாடுகளை ஐந்து கைகளும் விளக்கிக் கொண்டிருக்கின்றன.

துதிக்கை வலதுபுறம் வளைந்து சுருண்டிருந்தால் அவர் 'வலம்புரி விநாயகர்' என்றும், இடப்புறம் வளைந்து சுருண்டிருந்தால் 'இடம்புரி விநாயகர்' என்றும் அழைக்கப்படுகிறார். இதுதான் கணபதியின் பெருமை. துதிக்கை வளைந்தால்கூட அவருக்குப் பெயர் ஏற்படுகிறது என்றால் மற்றதைப் பற்றிச் சொல்லாமலே விளங்கும். அவ்வளவு உயர்ந்தவர் கணபதி. சிறந்த தத்துவ வடிவினர். அவருடைய ஒவ்வொரு கரமும் ஒவ்வொரு தத்துவத்தை விளக்குகிறது.

**துதிக்கையின் பெருமைகள் :**

இக்கரம்தான் விநாயக பெருமானுக்குக் 'குழந்தைகள் தெய்வம்' என்ற சிறப்புப் பெயரைத் தேடிக் கொடுத்தது. இக்கரம்தான் விநாயகர் யானை முகம் கொண்டவர் என்பதை தெளிவுபடுத்துகிறது. இக்கரம்தான் விநாயகர், பாதி அஃறிணை உருவம் (விலங்கு வடிவம்) கொண்டவர் என்பதைத் தெளிவுபடுத்துகிறது. இக்கரம்தான் விநாயகரை அகவல் பாடிய ஔவையாரை சேரமான் பெருமான், சுந்தரமூர்த்தி நாயனார் இருவருக்கும் முன்னதாகவே, கைலாசம் கொண்டு சேர்த்தது. வள்ளிமலையிலே முருகப் பெருமானையும் வள்ளியையும் இணைத்தது இத்திருக்கரம்தான். உமையையும் பதியையும் ஏழுமுறை வலம் வந்து 'உமாபதியே உலகம்' என்று உலகுக்கு உணர்த்தி, சிறப்புப் பொருந்திய மாங்கனியைப் பெற்றதும் இத்திருக்கரம்தான்.

சிவபெருமான் உமைக்கு உபதேசம் செய்தபோது அதைப் பாராமுகமாக அவள் கேட்க, சிவபெருமான் அவளைச் சபித்தார். அதுகண்டு விநாயகர் சினம் கொண்டு அங்கிருந்த வேதாகமச் சுவடிகளைக் கடலில் எறிவதற்கு எடுத்ததும் இத்திருக்கரம்தான். இதைத்தான் 'தமிழ் விடுதூது' என்ற நூலில் அதன் ஆசிரியர்,

"நசையுறவே செய்ய சிவஞானத் திரள் யோட்டி
லோரேடு கையில் எடுத்த கணபதியும்"

என்கிறார். அகம் புறம் மாற்றியதும் இத்திருக்கைதான்.

**துதிக்கை விளக்கும் தத்துவம் :**

சப்த ரிஷிகள் விநாயகரை 'சோண பத்ரம்' என்ற இலை வடிவில் வணங்கிக் கொண்டிருக்க, அங்கு விநாயகர் பால வடிவில் செல்ல, அங்கு யாரும் அவரை வணங்கவில்லை. அப்பொழுது இத்திருக்கரம்தான் சோணபத்ர இலை வடிவில் உள்ள விநாயகரை எடுத்து விழுங்கி தாம்தான் கணபதி என்று உணர்த்திற்று.

இந்நிலையில் விநாயகத் தத்துவத்தை உணர்ந்த அருந்ததி,விநாயக தத்துவத்தை விளக்கும் வகையில் மாவுக்குள் பூரணம் வைத்து மோதகம் செய்து வசிஷ்டர் மூலம் விநாயகருக்கு. முதல் மோதகம் கொடுத்த போது அம்முதல் மோதகத்தை வாங்கியதும் இத்திருக்கரம்தான். அன்றையிலிருந்து அவளுக்கு நல்லருள் கிடைத்தது மட்டுமல்லாமல் அம் மோதகத்தை தம் இடதுபுறக்கிழ்கரத்தில் வைத்துக் கொண்டிருக்கிறார். அது கீழே விழாமல் இருப்பதற்கு இத் திருக்கரம்தான் அதை எப்பொழுதும் பிடித்துக் கொண்டிருக்கிறது. காரணம், அருந்ததியால் முதன் முதலில் செய்து தம் தத்துவத்தை உணர்த்த தம் கரத்தில் கொடுக்கப் பட்டது. விநாயகர் அதை உண்ணாமல் தம் கரத்திலே வைத்துக் கொண்டு, 'அவளைப் போல மோதகம் செய்து பூஜிப்பவருக்கு நல்லருள் சேரும்' என்பதை உணர்த்தவே மோதகத்தை தம் கரத்திலே வைத்துக் கொண்டிருக்கிறார். இதைத் தான் 'காணபத்யம்' என்ற நூல் கூறுகிறது. இதைத்தான் சங்கர பகவத் பாதாள்,

"முதாகராத்த மோதகம்
ஸதாவிமுத்தி ஸாதகம்"

என்று கூறுவதாக அந்நூலின் தொகுப்பாசிரியர் திரு. செந்தில் துறவி அவர்கள் கூறுகிறார்.

**நான்காவது கரம் :**

சில விநாயகர் படங்களில் நான்காவது கரம் மோதகம் வைத்துள்ளதாக இருக்கும். அதன்மேல் துதிக்கை தொட்டுக் கொண்டுள்ளவாறு இருக்கும். இதுவும் சரியே. அதாவது நான்காவது வலதுபுற கையில் அக்ஷமாலைக்குப்பதில் மோதகம் இருக்கும். இதுவும் சரியே.

**முடிவுரை :**

இவ்வளவு உயர்ந்த பெரிய தத்துவங்களைக் கொண்டுள்ளன இந்த ஐந்து கரங்களும்.ஒற்றைப்படை கரம் கொண்டுள்ளதால் கணபதி 'ஐங்கரன்' என்று அழைக்கப்படுகிறார்.

துதிக்கை ஐந்தாவது கரமாக இருந்தாலும், உயர்ந்த தத்துவத்தையும், சிறந்த செயல்களையும் செய்துள்ளதால் துதிக்கையே 'முதற்கரமாக'ப் போற்றப்படுகிறது. இத்துதிக்கையே கணபதிக்கு 'முதற்கடவுள்' என்ற பெயரைத் தந்துள்ளமையால், துதிக்கையே விநாயகப் பெருமானின் முதற்கரம் ஆகும்.

இவ்வளவு உயர்ந்த 'தத்துவ வடிவமான' கணபதியை முதற்கடவுளை-ஐங்கரனை-விநாயக பெருமானை-சதுர் புஜனை - வணங்கி, வாழ்க்கையில் உயர்ந்த நெறிகளைப் பின்பற்றி, 'தத்துவ கணபதி'யின் பாதத்தில் சரண் அடைவோமாக.

# குருமாணக்குடி கன்னி விநாயகர்

அங்கயற்கண்ணியம்மையையே நிகர்த்த ஓர் அதிஸௌந்தர்ய தேவதை போல், ஒரு கன்னிகை கிடைக்காததால் பிரம்மச்சாரியாகவே அரச மரங்களின் கீழும் ஆற்றங்கரையோரங்களிலும் தனித்து வீற்றிருக்கும் ஸ்ரீ விநாயகப்பெருமான், தான் பரந்த மனத்தினராய்த் தன்னை வலம் வந்து வழிபட்டுப் பிரார்த்திக்கும் கன்னிப் பெண்களின் கோரிக்கைகளை நிறைவேற்றிக் 'கண திறைந்த' கணவன்மார்களை வெகு விரைவிலடையத் திருவருள் பாலிக்கும் 'கன்னி விநாயகர்' பெருமையைப் பலரறிய மாட்டார்கள்!




'காமிகல்யாணமூர்த்தி!' என்று போற்றுகின்றார் ஸ்ரீ ஆதிசங்கரபகவத் பாதாள், தமது 'ஸ்ரீ ஸுப்ரஹ்மண்ய புஜங்கம்' என்ற நூலில்! விநாயகப்பெருமான் அளவற்ற மகிமையும் உள்ளவர். எப்போதும் மங்கள கரமான மேனியுடன் கூடிய ஓர் ஒப்பற்றப் பரம்பொருள்! என்று போற்றி வர்ணிக்கிறார்.

தஞ்சை மாவட்டத்தில் பிரசித்த பெற்ற 'புள்ளிருக்கு வேளூர்' என்ற வைத்தீஸ்வரன் கோயிலெனும் திருத்தலத்துக்குத் தென்கிழக்கே ஏழு கிலோ மீட்டர் தொலைவிலுள்ள குருமாணக்குடியை எளிதிலடைய நல்ல சாலைகளுண்டு. அகலிகையைத் தகாத முறையிலணுகிய தேவேந்திரனுக்குத் துர்வாஸ முனிவரால் கொடுக்கப்பட்ட சாபத்தின் விளைவாகத் தன் மேனியெங்கும் யோனியாகிவிட, இந்திரனின் சாபம் நீங்கப் பெற்று, அவை ஆயிரம் கண்களாக மாறும்படித் திருவருள் புரிந்துத் தமக்கே 'கண்ணாயிரமுடையார்' என்றும், 'கண்ணாயிரேஸ்வரர்' என்றும் பெயர்களைப் பூண்டார் குருமாணக்குடியில் கோவில் கொண்டிருக்கும் ஈஸ்வரர்!

இறைவி: ஸ்ரீ முருகுவளர் கோதைநாயகி.

ஸ்வாமி சந்நிதியின் உட்பிராகாரத்தின் தென்புறம் எழில்மிக்க ஸ்ரீ கன்னி விநாயகர் வீற்றிருக்கின்றார் கம்பீரமாக! அவரது அருள் நாடி வருவோரின் எண்ணிக்கை நாளுக்கு நாள் பெருகி வருகிறது. விஷயமறிந்த அடியவர்கள் பற்பல ஊர்களிலிருந்தும், குறிப்பாக பிரதி ஞாயிற்றுக்கிழமைதோறும், பெருந்திரளாக வந்து கூடுகின்றனர்.

தீபமேற்றுதல், அடிப்பிரதட்சணம் செய்தல், அங்கப் பிரதட்சணம் புரிதல் போன்ற எத்தனையோ விதமான பிரார்த்தனைகள்! ஒவ்வொருவருக்கும்தான் என்ன விதமான மனத் துயரங்கள், மனக் குறைகள்! இங்கு இனவேற்றுமையைக் காணவே முடியாது! ஒருமித்த மனத்தினராய் 22 முறை ஸ்ரீ கன்னி விநாயகமூர்த்தியை வலம் வரக் காணலாம்!

கிழக்கு நோக்கிய கட்டை கோபுர வாயில். அதன் எதிரிலேயே அழகிய படிக்கட்டுகளுடன் அழகான திருக்குளம். துல்லியமான நீர்! இதுதான் இந்திர தீர்த்தம்! இதில் நீராடி, முறையே வழிபட்டுப் பிரார்த்தித்துக்கொள்ளும் கன்னிகையரின் திருமணம் சிரமமின்றி வெகு எளிதில் விரைவிலேயே நடைபெற்றுவிடுகின்றதென்றால் ஸ்ரீ கன்னி விநாயகரின் மகிமை விளங்குகிறதல்லவா?

"ஸமஸ்தலோக ஸங்கரம் நிரஸ்த
தைத்ய குஞ்சரம்;
தரேதரோதரம்வரம், வரேப வக்த்ர
மக்ஷரம்;
க்ருபாகரம் க்ஷமாகரம் முதாகரம்
யஸஸ்கரம்
மனஸ்கரம் நமஸ்க்ருதாம் நமஸ்
கரோமி பாஸ்வரம்"
— ஸ்ரீ கணேச பஞ்சரத்னம்.

'மயூரப்ரியா'

'எல்லோருக்கும் நன்மை தருபவர் ஸ்ரீவிநாயகப்பெருமான்! கஜாஸுரனைக் கொன்றவர்! பெரிய வயிறுள்ளவர்! சிறந்தவர்! யானை முகத்தவர்! அழிவற்றவர்! கருணைக் கடல்! பொறுமைக் கடல்! இன்பக் கடல்! கீர்த்திக் கடல்! வணங்குவோர்க்கு அருள்பவர்!' இவ்வளவு பெருமை வாய்ந்த ஸ்ரீ கன்னி விநாயகரை நாமும் வலம் வந்து, வணங்கி நலம் பெறுவோம், வாரீர்!



# குறள் காட்டும் கடவுள்

தமிழ்மொழி தன்னுடைய ஏனைய இலக்கியச் செல்வங்களை இழந்தாலும் பரவாயில்லை, திருக்குறள் ஒன்றே போதும் அதன் வாழ்விற்கும் வளத்திற்கும் உறுதி சேர்க்க! உலக இலக்கியங்கள் அனைத்திலுமே அதற்கு ஈடான ஒரு நூலைக் காண்பதரிது என்பர் தமிழ்ச்சான்றோர். ஈரடிகளான் இயன்ற குறள் வெண்பாக்கள் மூலம் ஒப்புயர்வற்ற அரும் பெரும் வாழ்வியற் கருத்துக்களைச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் பெற்றியுடைமையே அத்தனிச் சிறப்புக்குக் காரணம் எனக் கூறுவர் கற்றறிந்தோர்.

திருக்குறள் ஒரு நீதி நூல். அது மனிதன் வாழ்வாங்கு வாழும் வழி காட்டவே பிறப்பெடுத்தது. அச் செந்நெறி படர்ந்த வாழ்க்கையும் இறைவன் திருத்தாள் சேரும் போதே நிறைவெய்துகிறது. ஆண்டவன் அடி சேர்தலே வாழ்வின் குறிக்கோள் என்றால், அதைப் பற்றிய தாகவே நூல் முழுவதும் அமையாமல் தனிமனித, சமுதாய சீர்திருத்தக் கருத்துக்களின் கோவையாக திருக்குறள் அமைந்திருப்பதேன் என்ற வினா எழலாம். இதற்கு விடையாக, "'கண்டதே காட்சி, கொண்டதே கோலம்' என்று நெறிமுறையின்றி விலங்கு வாழ்க்கை நடத்தினால் ஒழுக்கமிராது. ஒழுக்கமில்லாதவனிடம் இறைவன் உண்மையை உள்ளபடி உணர்ந்து அவனடி பணியும் எண்ணம் எழாது. எனவே ஒழுக்க நியதிகளை வகுத்துக் கொடுப்பதன் மூலம் செம்மைப்பட்ட மனித வாழ்வினைப் படைத்து, அவ்வாழ்வின் பயனாக இறைவனோடு இரண்டறக் கலத்தலை இயல்பாக்குகிறது திருக்குறள்" என்று சொல்லலாம். இதனை வலியுறுத்தும் விதத்தில்,

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப்படும்.

என்ற குறள் அமைந்துள்ளது.

திருக்குறள் ஆசிரியர் திருவள்ளுவர், 'இறையுணர்வெய்திய ஒருவன் இவ்வுலக வாழ்வைத் துறந்தாக வேண்டும்' என்ற கோட்பாடுடையவரல்லர். அவருக்கு இல்லற நெறியும், துறவற நெறியும் உடன்பாடே. முற்றுந் துறந்தவன் துறவி. அத் துறவியைப் பேணும் பணியோடு ஏனைய இல்லறக் கடமைகளும் உடையவன் இல்லறத்தான். இவ்விரு திறத்தாரும் தத்தம் நெறிக்கேற்ற கடமைகளை வழுவிலாது ஆற்றிவரின், இறை நெறி படர எந்தத் தடையும் இராது. எனவேதான் இறைவனடிச் சேர்தற்கு தடைக்கற்களானவற்றைக் களையும் நோக்கில் நீதிக் கருத்துக்களை நிரம்பச் சொல்லிச் சென்றுள்ளார் திருவள்ளுவர்.


திரு. வே. சோமசுந்தரம்,
சென்னை.


தடைகளற்ற ஆற்றொழுக்கன்ன ஒழுக்க வாழ்வுடையவன் இறையடியை இயல்பாகவே சென்றடைகிறான். அப்படியாயின், திருவள்ளுவர் திருக்குறள் நூல் வழி கூறும் ஒழுக்க நியதிகளின்படி வாழும் ஒருவன் கடவுள் உண்மையை மறுப்பானாயின், அவன் கடைத்தேற முடியுமோவெனின் நிச்சயமாக முடியாது. ஒழுக்க வாழ்வெனும் மாளிகையின் ஆதாரமே கடவுட் கொள்கைதான். அதனை மறுப்பவன் ஏனையவற்றைக் கற்பதால்-கற்றபடி நடப்பதால்-யாதொரு நன்மையும் விளையாது. கடவுள் உண்டு என்று உணர்ந்தால் மட்டும் போதாது. அக்கடவுளே கதியென்று அடி தொழவும் வேண்டும். இவ்வுண்மையை,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"

என்ற குறள் உறுதிப்படுத்துகிறது.

இவ்வாறாக தம்முடைய நூல் நுவலும் கருத்துக்களுக்கு ஆதாரமான கடவுட் கோட்பாட்டை நெடுக உரைக்க வேண்டிய அவசியமில்லை என்று கருதியே 'கடவுளியல்' என்ற தனியியலாகவோ-'இறைப்பால்' அல்லது 'வீட்டுப்பால்' என்ற தனிப் பாலாகவோ - திருவள்ளுவர் நீட்டி முழக்கி எழுதவில்லை. திருக்குறள் நீதி நூலாதனின் இறைவன் உண்மையைக் கூறி, அவனடி பணிதலின் இன்றியமையாமையை வற்புறுத்தலோடு அமைந்தது. அதனாலும் கடவுள் பற்றிய குறட்பாக்களின் எண்ணிக்கை குறைந்தது. அதுவே தோத்திர நூலாக இருந்திருப்பின் நிறைய குறட்பாக்கள் இறைபுகழ் பற்றியனவாக நமக்குக் கிடைத்திருக்கக் கூடும். திருக்குறளிலுள்ள நூற்று முப்பத்து மூன்று அதிகாரங்களில் முதல் அதிகாரமாக அமைந்துள்ள 'கடவுள் வாழ்த்து', மொத்தமுள்ள ஆயிரத்து முன்னூற்று முப்பது குறட்பாக்களில் அடங்கும் பத்தே பத்து குறட்பாக்களைக் கொண்டுள்ளது. எனவே புலவர்கள் தாம் பாடும் நூலுக்குக் காப்பாக கடவுள் வணக்கம் பாடும் வழக்கம் உள்ளமையைப் பின்பற்றியே திருவள்ளுவரும் தம் நூலின் முதல் அதிகாரத்தினை அமைத்துள்ளார் என்று கொள்ளலாமோவெனின் அவ்விதம் கொள்வதற்கில்லை. காப்புச் செய்யுள் போல் திருவள்ளுவரின் 'கடவுள் வாழ்த்து' அதிகாரம் அமைந்திருக்கவில்லை. 'இத்தன்மையன்

இறைவன்' 'இவனடி சேர்ந்தார்க்கே பிறவிப்பிணி ஒழியும்' என்று அறிவுறுத்தும் முறையிலேயே முதலதிகாரம் பாடப்பட்டுள்ளது. எனவே திருக்குறளின் மற்றைய அதிகாரங்களைப் போலவே தாம் சொல்ல வந்த கருத்தின் விளக்கமாகவே 'கடவுள் வாழ்த்தும்' இலங்குகின்றது. அதற்குள்ள கூடுதலான பெருஞ்சிறப்பு என்னவென்றால் திருக்குறளின் ஏனைய அதிகாரங்களுக்கெல்லாம் ஆதாரமாகவும் அமைந்திருப்பதாகும்.

''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு''

என்ற குறள் வழிச்சென்று '...கடவுள் வாழ்த்து முதற்றே குறள்' என்றும் உரைக்கலாம்.

அத்துணை சிறப்பு வாய்ந்த 'கடவுள் வாழ்த்து' அதிகாரம் காட்டும் கடவுள் யார்? அவன் ஆதிபகவன், வாலறிவன், மலர்மிசை ஏகினான், வேண்டுதல் வேண்டாமை இலான், பொறிவாயில் ஐந்தவித்தான், தனக்குவமை இல்லாதான், அறவாழி அந்தணன், எண் குணத்தான் இறைவன்.

'ஆதி முதல்வனான அவனைத் தொழும் கற்றறிந்தார் நீடு வாழ்வர். அவர்க்கு யாண்டும் இடும்பை இல. அவர்பால் இருள்சேர் இருவினையும் சேரா. அவரிடத்து மாற்றலரிய மனக்கவலைக்கு இடமில்லை. அன்னார் மிக எளிதில் பிறவாழி நீந்தி பிறவிப் பெருங்கடலையும் கடப்பர்.

திருக்குறள் காட்டும் கடவுள் எந்தவொரு மதத்தினருக்குமான தனிச் சொத்தாக இல்லை. பகுத்தறிவுக்கண் கொண்டு ஆராயும் யாருக்கும், இவ்வகிலத்தையும், அண்டங்களையும் படைத்த ஆதிகாரணன் ஒருவன் இருக்க வேண்டுமென்பது தெற்றென விளங்கும். அவ்வாண்டவன் யாரினும் எவற்றினும் மேம்பட்ட வாலறிவனாக இலங்குவன் என்பதிலும் எவருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. அதே போல திருக்குறளில் இறைவனின் இயல்புகளாகவும், அவனைத் தொழுவார் அடையும் பேறுகளாகவும் கூறப்பட்டுள்ளமைப் பற்றியும் கருத்து வேறுபாடு கொள்ள இடமில்லை.

இருப்பினும், திருக்குறளாசிரியர் திருவள்ளுவர் அவர் காலத்து தமிழ் நாட்டில் நிலவிய சமயத்தொடர்பான கருத்துக்களாலும், கதைகளாலும் கவரப்பட்டே உள்ளார். அவருக்கு ஊழிலும், எழுபிறப்பிலும், வினைப்பயனிலும் நம்பிக்கை இருந்துள்ளது. திருக்குறட்பாக்களில் ஆங்காங்கே பயின்று வரும் தேவர், இந்திரன், செய்யாள், அவள் தவ்வை, அடியளந்தான், தாமரைக் கண்ணான் போன்ற சொற்கள் அவர் எத்தகைய மத ஒழுக்கங்களுடைக்கிடையில் வாழ்ந்தாரென்பதைக் காட்டுகின்றன. அவருக்குள்ள பெருஞ்சிறப்பெல்லாம், அவர் தாம் சார்ந்திருந்த மதத்தை மட்டுமே உயர்த்திப் பேசினாரல்லர் என்பது மட்டுமின்றித் தாம் பின்பற்றி ஒழுகிய மதமே இனம் கண்டுக் கொள்ளப்படாத வகையில் பொதுமை பேணியுள்ளார் என்பது தான். இத்தன்மை திருக்குறள் எம்மதத்தினராலும் ஏற்றுக்கொள்ளப் பட வேண்டுமென்ற அவர்தம் அவாவால் விளைந்ததாகலாம்.

சிலருக்கு 'திருக்குறள் ஓர் இறை நூல்' என்ற முடிவிற்கு வர முப்பாலில் ஒன்றாக அங்கம் வகிக்கும் இன்பத்துப்பால் பெரும் தடையாகத் தோன்றலாம். இங்கே நாம் திருவள்ளுவருக்கும், மற்ற நீதி நூல் ஆசிரியர்களுக்குமிடையிலுள்ள முக்கியமான வேறுபாடொன்றைக் கவனிக்க வேண்டியவர்களாயுள்ளோம். மற்றவர்களெல்லாம் பெண் தொடர்பு மனிதனை உயர்வடைய விடாது என்ற கருத்துடையவர்கள். அவர் பெண்ணின் பெருமையைப் பெரிதாகப் பேசியுள்ளார். பரத்தமையை மிகவும் பழிக்கும் அவர் பெண்ணும் ஆணுமாய்க் கூடி வாழும் இல்லின்பத்தை மறுத்தாரல்லர். மாறாக பழந்தமிழர் கண்ட களவு, கற்பு என்ற இருவகையிலும் தனிச்சிறந்த சொற்சித்திரங்களை இருநூற்றைம்பது குறட்பாக்களில் தீட்டியுள்ளார். இல்வாழ்க்கை இறைநெறிக்கு மாறுபட்டதோவென்ற மயக்கத்தை அறவே நீக்கும் எண்ணத்துடனேயே அறமும், அதன்

## ஆத்ம விசாரத்துக்கு ஓர் ஆற்காடு!

வட ஆற்காடு மாவட்டத்தில் ஆற்காடு என்னும் ஊர் வரலாறு புகழ் கொண்ட ஒரு வளமையான ஊர். ஆறு காடுகள் சுற்றியிருந்ததால் ஆறுகாடு எனப் பெயர் அமைந்தது. இது ஷடாரண்ய க்ஷேத்திரம் எனவும் வழங்கப்படுகிறது. இங்கு ஆறு காடுகளில் ஆறு முனிவர்கள் தவம் செய்துள்ளார்கள். இம்முனிகள் அறுவரும் தங்களுக்கென தனித்தனியே கீழ்கண்டவாறு ஒரு ஆசிரமத்தை அமைத்துக்கொண்டு அதன் அருகில் ஒரு சிவலிங்கப் பிரதிஷ்டையும் செய்துள்ளார்கள்.

1. புதுப்பாடி — பாரத்வாஜ ஆசிரமம் — பாரத்வாஜேச்வரர்.
2. குடிமல்லூர் — அத்ரியாசிரமம் — அத்திரீச்வரர்.
3. காரைக்காடு — அகஸ்தியாசிரமம் — அகஸ்தியேச்வரர்.
4. வேப்பூர் — வசிஷ்டாசிரமம் — வசிஷ்டேச்வரர்.
5. விஷாரம் — வால்மீகி ஆசிரமம் — வால்மீகநாதர்.
6. நவலாத்தோப்பு — கச்யபாசிரமம் — கச்யபேச்வரர்.

திரு. ஆர். சுப்பராவ் — திருக்கோவலூர்.

வழிப்பட்ட பொருளும் உரைத்த திருவள்ளுவர் இன்பத்துப்பாலையும் எழுதியுள்ளார். காதல் மணம் புரிந்து கருத்தொருமித்து வாழும் கணவன் மனைவியரின் இலட்சியம் இறையடி சேர்வதாய் இருக்க வேண்டும் என்பதே வேண்டப்படுவதாகும்.

தவம் என்ற சொல்லிற்குத் திருக்குறள் தரும் விளக்கம் ஈண்டு கருதத்தக்கது. காடுமலை ஏகி, காயத்தை வாட்டி வதைத்து அடைய முடியாத மன ஒருமைப்பாட்டை இல்லிலிருந்தே அடையலாம். அதற்குத் தேவையானதெல்லாம் பழியற்ற வாழ்வொன்றே. மழித்தலும் நீட்டலும் புறச்சின்னங்கள். பண்போடியைந்த வாழ்வே அகத்தின் வெளிப்பாடாய் நம்மை ஆண்டவனிடம் இட்டுச் செல்லும் தகைமைத்தது. மனத்தைக் கோயிலாக்கி, ஊனுடம்பை ஆலயமாக்கி, தன்னால் பிறவுயிர் எத்துணை துன்பமும் அடையாதவாறு காத்து, தன்னை வந்தடையும் துன்பத்திற்கு நோகாது, தன்னிலிருக்கும் இறை எவ்விடத்தும் நீக்கமற நிறைந்திருப்பதை உணர்ந்து, அவனிடத்து ஒரு முகப்பட்ட சிந்தையராய் வாழ்வதுவே தவமாகும்.

“உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண்
செய்யாமை
அற்றே தவத்திற் குரு”

என்பது குறள்.

மனவழிபாடே திருக்குறளால் பெரிதும் வேண்டப்படுகிறது.

“மனத்துக்கண் மாசிலனுதல் அனைத்
தறன்
ஆகுல நீர பிற”.

என்றாற்போல புறத்தில் செய்வனவெல்லாம் ஆரவாரத்தன்மை உடையனவாகவே உள்ளன.

“அவிசொரிந் தாயிரம் வேட்டலின்
ஒன்றன்
உயிர்செகுத் துண்ணாமை நன்று”

என்றவாறு புறவழிப்பாட்டில் பின்பற்றியே தீர வேண்டுமென்ற கட்டாயமற்றவை எனக் கருதியவற்றைத் திருக்குறள் எடுத்துக்காட்டத் தவறவில்லை. அதற்காக புற ஒழுக்கமே கூடாதென்றோ, புறவழிபாடு தேவையற்றதென்றோ முடிவு கட்ட வேண்டாம். புறவழிபாட்டில் ஆன்ம நேய ஒருமைப்பாட்டிற்கு மாறான சடங்கு, சம்பிரதாயங்களுக்கே திருக்குறள் எதிர்ப்பு தெரிவித்துள்ளது என்பதே சரி. ஆலயம் சென்று வரலும், கோயிற்றிருப்பணிகளில் ஈடுபடலும்,இறையடியாரைப்போற்றித் துணை கொளலும், பக்தி வழிப்படலும், பரமன் புகழ் கேட்டுச் சிந்தித்தலும் நம் முன்னோர் கண்ட நல்வழிகள். மனம், மொழி, மெய்களான் இறைவழிபாட்டில் ஈடுபடல் நாம் உய்யும் வழியாகும்.

திருக்குறள் காட்டும் கடவுள் நம்மைப் படைத்து, காத்து, உய்யும் வகை யருளும் மெய்ப்பொருள். அவனே கதியென்று அவன் திருவடிகளைச் சிக்கெனப் பிடித்தால் பிறவிப் பெருங்கடலைத் தாண்டி பிறவாப் பேரின்பத்தில் திளைக்கலாம். பற்றொன்றுமில்லாத அப்பரம்பொருள் நமக்குள்ள ஒரே பற்றுக்கோடு. அவன் கழலிணைகளில் நம் பற்றினை வைப்போமானால் நம்மைப் பற்றியுள்ள பிற பற்றுகள் நீங்கி அவனில் ஐக்கியமாகி இன்புறலாம்.

“பற்றுக பற்றற்றான் பற்றினை அப்
பற்றைப்
பற்றுக பற்று விடற்கு”

*

## ஆண்டவன் அருள்

ஒரு ஊரில் ரொம்ப நாட்களாக மழையே பெய்யவில்லை. கடுமையான வறட்சி ஏற்பட்டது. ஒருநாள் திடீரென்று நல்ல மழை பெய்தது. அந்த ஊரில் வசிக்கும் பாட்டி, தன் பேத்தியிடம், “வீட்டில் இருக்கும் பானைகளை மழைத் தண்ணீர் விழும் இடத்தில் வை” என்றாள். பேத்தியும் அவ்வாறே செய்தாள். மழை நின்றதும் பாட்டி போய் பானைகளைப் பார்த்தால் அவற்றில் தண்ணீர் நிரம்பவில்லை. பானைகள் வைத்த இடத்திலேயே இருக்கிறது. பானைகளில் ஓட்டையும் இல்லை. பிறகு தண்ணீர் நிரம்பாததற்கு காரணம் என்ன? அத்தனை பானைகளும் கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தன. அதுபோல நம்முடைய மனமும் தூய்மையாக இல்லாமல் பானைகளைப் போல கவிழ்த்து வைக்கப்பட்டிருந்தால் ஆண்டவன் அருள் கிடைக்காது.

— திருமுருக கிருபானந்தவாரியார்.

## சிவபூஜை செய்து நற்பலனைப் பெற்றவர்கள்

மயிலாப்பூரில் கற்பகாம்பிகை
காஞ்சிபுரத்தில் காமாட்சி
திருவானைக்காவலில் அகிலாண்டேஸ்வரி
அவிநாசியில் கருணாம்பிகை
திருச்செந்தூரில் சுப்பிரமணியர்
திருவிடைக்கழியில் சுப்பிரமணியர்
செங்காட்டங்குடியில் விநாயகர்
இராமேசுவரத்தில் இராமர்
திருக்கடவூரில் மார்க்கண்டேயர்
சீர்காழியில் பிரம்மன்

அனுப்பியவர் : வி. ஸ்ரீதர் — கோயம்புத்தூர்.

# திருமலையில் தங்கு வசதிகள்

திருமலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் தங்கு வசதிகளின் வாடகைக் கட்டணங்கள் கீழ்வருமாறு 1-5-87 முதல் உயர்த்தப்பட்டுள்ளன.

| குடில்கள் வகை | வாடகை விவரங்கள் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|
| சிறப்பு வகை குடில்கள் | ரூ. 100/- |
| டி. பி. உட்குடில்கள் | 70/- |
| டி. பி. வெளிக்குடில்கள், III-வது வரிசையும் சேர்த்து | |
| 'ஏ' பகுதி (வெந்நீர் வசதி உள்ளது) | 20/- |
| 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| வி. வி. சி. மற்றும் எம். பி. சி. 31 மற்றும் 26 | 70/- |
| எம். பி. சி. 'ஏ' பகுதி (வெந்நீர் வசதியுடன்) | 20/- |
| எம். பி. சி. 'பி' பகுதி (வெந்நீர் வசதி இல்லாதது) | 12/- |
| டி. பி. அறைத்தொகுதிகள் மற்றும் ஏ. டி. சி. அறைத் தொகுதிகள் | |
| வெந்நீர் வசதியுடன் | 15/- |
| வெந்நீர் வசதி இல்லாதது | 10/- |
| ஏ. டி. சி. கீழ்த்தளம் | |
| 'ஏ' பகுதி | 30/- |
| 'பி' பகுதி | 30/- |
| எஸ். எம். சி.; எஸ். என். சி.; ஏ. என். சி.; ஜி. என். சி.; எச். வி. சி. | |
| 'ஏ' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| 'பி' பகுதி வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதியுடன் | 25/- |
| எச். வி. டி. சி. அறைத்தொகுதிகள் (ஒவ்வொன்றும்) வெந்நீர் வசதி இல்லாதது | 12/- |
| பெரிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி — வெந்நீர் வசதியுடன் | 50/- |
| சிறிய அறைத்தொகுதியுடன் கூடிய எச். வி. சி. விருந்தினர் விடுதி வெந்நீர் வசதி இல்லாதது | 25/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி பெரிய அறைத்தொகுதி (வெந்நீர் வசதியுடன்) | 70/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மூலை அறைத்தொகுதி | 60/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி மற்றைய அறைத்தொகுதி | 50/- |
| என். ஜி. விருந்தினர் விடுதி I & II | |
| மூலை அறைத்தொகுதி | 60/- |
| மற்றைய அறைத்தொகுதிகள் | 50/- |
| எச். ஆர். ஜி. முழு குடில் | 250/- |
| எஸ். வி. விருந்தினர் விடுதி | |
| பெரிய அறைத்தொகுதி எண்; 9 மற்றும் சிறிய அறைத்தொகுதி எண்: 7 மற்றும் 8 | 750/- |
| பெரிய அறைத்தொகுதி எண்: 1 மற்றும் சிறிய அறைத்தொகுதி எண்: 6 | 750/- |
| சிறிய அறைத்தொகுதிகள் எண்: 2, 3, 4, 5, (ஒவ்வொன்றும்) | 250/- |
| ஸ்ரீநிகேதன் (ஒவ்வொரு அறைத்தொகுதி) (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 4) | 250/- |
| இந்திரா விருந்தினர் விடுதி (ஏ. சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி. (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 2) | 250/- |
| பாலகுடீரம் (ஏ.சி.) ஒவ்வொரு அறைத்தொகுதி (எஸ். பி. நகர் விருந்தினர் விடுதி எண்: 3) | 250/- |
| கோகுலம் (ஏ. சி.) | 500/- |
| டி. பி. சி. மற்றும் ஏ. டி. சி. குடில்களில் முதல்தளம் முழுப்பகுதி | 60/- |
| அரைப்பகுதி | 30/- |
| எஸ். என். விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |
| ராம் பகீச்சா விருந்தினர் விடுதி (அறைத்தொகுதி ஒன்றிற்கு) | 50/- |

**திருமணக்கூடங்கள்**

| | |
|---|---|
| எஸ். எம். சி. 260, 266, 267, 272. ஒவ்வொரு குடிலுக்கும் நாள் ஒன்றிற்கு | 75/- |
| ரூயா 248 | 100/- |
| கோகினேனி 226 | 100/- |
| சிதம்பரம் செட்டியார் குடில் | 125/- |
| ஏ. டி. சி. 99 | 100/- |
| டி. பி. சி. 71, 136, 152 | 75/- |
| பாலாஜி திருமண மண்டபம் | 500/- |
| சீதாராம திருமண மண்டம் | 1000/- |

# வாழ்வாங்கு வாழ !

திரு. டி. கஸ்தூரிரங்கஸ்வாமி
எம்.ஏ., எம்.எட்.,
கோயம்புத்தூர்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்

என்றார் வள்ளுவப் பெருந்தகை. வாழ்வாங்கு வாழ்தல் யாங்ஙனம்? அவ்வினாவிற்குப் பொய்யில் புலவரே தமது முதல் அதிகாரம் கடவுள் வாழ்த்தில் தெள்ளத்தெளிய பதில் கூறியுள்ளார்.

வள்ளுவன்தன்னை உலகினுக்கே தந்து
வான் புகழ் கொண்ட தமிழ்நாடு

கம்பனைப் போல் வள்ளுவர் போல் இளங்கோவைப் போல் பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை. உண்மை, வெறும் புகழ்ச்சியில்லை என்ற பாரதி வாக்கிற்கிணங்க வையத்துள் வாழ் வாங்கு வாழ்ந்தவர் வள்ளுவர். 'நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து மறைமொழி காட்டிவிடும்' என்பதற்கேற்ப வேதத்தின் சாரத்தை உணர்த்தியவர் அவர்.

அவரது நிறைமொழி 'கடவுள் வாழ்த்து' அதிகாரத்தில் மறை மொழியின் நுணுக்கத்தை உணர் வோமாக.

தெய்வப் புலவனின் கடவுள் வாழ்த்து தனித்தன்மையது, மனிதனை மனிதனாக்குவது, மனிதன் உயர்ந்து கடவுள் தன்மை அடையக்கூடியது.

கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை

மனிதனும் எட்டு குணங்களை அடைவானேயாயின் கடவுட் தன்மை பெறுகிறான். அவை யாவை? அதற்கு விடையாக அப்பகுதி யிலேயே விளக்கியுள்ளார். அந்த எட்டுக் குணங்களாவன:

1. வாலறிவன்
2. மலர் மிசை ஏகுதல்
3. வேண்டுதல் வேண்டாமை இலான்
4. இருள்சேர் இருவினையும் சேரான்
5. பொறிவாயில் ஐந்தவித்தான்
6. பொய்தீர் ஒழுக்க நெறி நின்றார்
7. தனக்கு உவமை இல்லாதவன்
8. அறவாழி அந்தணன்

அவனவன் குணத்தையும் நாம் அடையக்கூடியதுதானே! அவற்றைச் சிந்திப்போமாக.

கடவுளின் முதற்குணம் வாலறி வனாக உள்ளான். நிறைந்த பரி பூர்ண அறிவை உடையவன். கற்ற தனாலாய பயன் நிறைந்த அறிவுடை யவனாக வாழ்தல். நம்மாழ்வாரும், 'முழுநீர் முகில்வண்ணன், கண்ணன் விண்ணாட்டவர் மூதுவராம்' என்றார். அதற்குச் சான்றாக நம்மாழ்வார் மணி வாசகர் வாழ்ந்து காட்டி உலகுய்யச் செய்த தமது வாலறிவை நூல்கள் வாயிலாக வெளிக் காட்டினர். அவர்களைப் பின்பற்றுவோமாக.

கடவுளின் இரண்டாவது குணம் "மலர்மிசை ஏகினான்". மலர் மிக மென்மையானது மலரினும் மெல் லிது காமம் என்றார். மலரினும் மென்மையானவன் இறைவன். உல கினில் நாம் அம்மென்மைத் தன் மையை ஊணர்வோமாக.

மூன்றாவது மறைமொழி காட்டு வது வேண்டுதல் வேண்டாமை இலான். வேண்டும் என்பதில்லை, வேண்டாம் என்பதுமில்லை, அத் தகைய பேறு பெற்ற வாழ்க்கைக்குச் சான்றாக காந்தியடிகள் வாழ்ந்து காட்டினார். அவர்களின் வேண்டு தல் வேண்டாமை இயல்பை புரிந்து பேறு பெறுவோமாக.

அடுத்து வரிசையில் வரும் குணம் "இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்" ஆகும். நல்வினை தீவினை இரண்டும் மயக்கத்தை உடையன. அதற்கப்பாற்பட்டு வாழ் பவனே கடவுள். இருவினையும் சேரா இயல்புடைய இராமகிருஷ்ண பரமஹம்சர், புத்தர், இயேசு, மகம்மது போன்ற ஞானிகள் நன்கு வாழ்ந்து காட்டியுள்ளார்கள். அவர்களது அடிச்சுவட்டைப் பின் பற்றுவோமாக.

ஐம்பொறிகளை அடக்கியவன் பொறிவாயில் ஐந்து அவித்தவன் ஆவான். மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐந்து பொறி களைக் கட்டுப்படுத்தி வெற்றி கண்ட வர் ரமண மகரிஷி போன்றவர். காந்தியடிகள் மூன்று குரங்கு பொம் மைகளின் வாயிலாய் இதை உலகிற் குணர்த்தினார்.

சென்ற இடத்தில் செலவிடா தீதொரீஇ
நன்றின்பால் உய்ப்ப தறிவு.

மனத்தை சென்ற இடத்தில் செல்லவிடாமல் தீமையானதி லிருந்து நீக்கி காத்து நன்மையான தில் செல்ல விடுவதே அறிவு.

அடுத்த மேன்மை குணமாக பொய்தீர் ஒழுக்கத்தைக் கூறினார். கல்வி கற்பதுஅறிவைப் பெறுவதற்கு. அறிவு ஒழுக்கத்தைப் பெறுவதற் காகும். ஒழுக்கமில்லையானால் அறி வினாலும் கல்வியினாலும் பயனில்லை என்பதே. பிசிர் ஆந்தையார் 'யாண்டு பலவாக நரையில் ஆகுதல் யாங்காகியர் என வினவுதிரிராயின்' என்னும் பாடலில் தலையாய கார ணம் கூறுகிறார். தமது ஊரில் கற்க வேண்டிய நூல்களைக் கற்று, பணிய வேண்டிய பெரியோரிடத்தில் பணிந்து ஐம்புலனும் அடங்கப் பெற்ற சான்றோர் பலர் வாழ்வதால் தமக்கு வயதாகியும் நரை திரை

(36-ம் பக்கம் பார்க்க)

# வால்மீகி திருவுள்ள விளக்கு

## ஸ்ரீ காஞ்சீ காதி அனந்தாசார்யஸ்வாமி அருளிய வால்மீகி பாவ தீபத்தின் மொழிபெயர்ப்பு

விசேடவுரை :

'இந்தப் பரமாத்மா எவனை அருள் செய்யத் தக்கவனாகத் தேர்ந்தெடுக்கிறானோ அவனால் மட்டுமே இவன் அடையத் தக்கவனாகிறான்' (முண்டகோ 3-2-3), 'ஆனந்தமயனான இப்பரமாத்மாதான் ஸம்ஸாரானந்தத்தையும் மோக்ஷானந்தத்தையும் அடைவிக்கிறான்' (தைத்-ஆன-2-7), 'பிறவிக் கடலுக்கு அக்கரையான மோக்ஷத்தை அடைவிக்கும் அணையாகிறான் இப்பரமாத்மா' (முண்டகோ-2-2-5), 'மோக்ஷத்துக்கு முக்கியமான அணையானவன்' (ச்வேதா 6-19) என்றிவை முதலிய ச்ருதிகளாலும் மற்றுமுள்ள ஸ்ம்ருதிகளாலும் மோக்ஷமளிக்கும் தன்மை பரப்ரஹ்மத்தினிடமே உள்ளதாக நிலைநாட்டப்பட்டது. வ்யாஸ பகவானாலும் 'ப்பலம் அத: உபபத்தே:' (ப்ரஹ்ம ஸூத்ரம் 3-2-37) இம்மையும் மறுமையுமான பயனெல்லாம் இப்பரம புருஷனால் உண்டாகின்றன; எல்லாமறியுந் தன்மை எல்லாம் செய்ய வல்லமை முதலிய குணங்களைக் கொண்ட அப்பரம புருஷனுக்கே பயனளிக்குந் தன்மை பொருந்துமாகையால்-என்று எல்லாப் பயனையும் அளிக்குந்தன்மையை நிலை நாட்டும் வாயிலாக மோக்ஷமாகிய பலனைத் தரும்பான்மை பரப்ரஹ்மத்திற்கே உரியதாக ஸ்தாபிக்கப்பட்டது. இவ்வாறு பரப்ரஹ்ம மொழிந்த மற்றோர் பொருளில் இல்லாமையால் பரப்ரஹ்மத்வத்தை விட்டுப் பிரியாத மோக்ஷமளிக்குந் தன்மையானது ஸ்ரீமத் ராமாயணம் ஆரண்ய காண்டம் அறுபத்தெட்டாவது ஸர்க்கத்தில் இராமனாக அவதரித்த விஷ்ணுவுக்குச் சொல்லப்பட்டதாய்க் கொண்டு அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறிவிக்கின்றது; ஓரிடத்தில் ஒரு பொருளை விட்டுப் பிரியாத தருமமொன்று இருந்தால் அது தானிருந்த விடத்தில் இருந்தே தீர வேண்டிய அப்பொருளின் இருத்தலை அறிவிக்குமென்பது அனுபவத்தில் கண்டதொன்றாகையால் என்க. (மலையில், நெருப்பை விட்டுப் பிரியாத புகை இருந்தால் அது தானிருந்தவிடத்தில் இருந்தே தீர வேண்டிய நெருப்பின் இருத்தலை அறிவிக்கின்றமை இதற்கு உதாரணமாகக் கொள்க.)

---

*தமிழாக்கம் :*

**திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்.**

*சிரோமணி வித்வான்*

*திருப்பதி.*

---

அவ்வாரண்ய காண்டத்தில் இராவணன் ஸீதையைக் கவர்ந்த பிறகு அவளைத் தேடிச் சென்று கொண்டிருக்கும்போது ஜடாயுவின் வாயிலாகச் சீதை அபஹரிக்கப்பட்ட விஷயத்தை அறியலுற்ற ஸ்ரீராமசந்திரன் 'இப்பறவை யரசனான ஜடாயு எனக்காக உயிர் துறந்தான்' (68-23) என்று மோக்ஷமளிப்பதற்கு வேண்டிய பக்தி முதலான உபாயங்கள் ஜடாயுவினிடம் இல்லாமலிருப்பினும் தனக்காக உயிர்விட்டதையே மோக்ஷமளிப்பதற்குப் போதிய உபாயமாக நினைத்து 'யா கதிர் யஜ்ஞசீலாநாம் ஆஹிதாக்நே: ச யா கதி: | அபராவர்த்திநாம் யா ச யா ச பூமிப்ரதாயிநாம்‖ மயாத்வம் ஸமநுஜ்ஞாத: கச்ச லோகாந் அநுத்தமாந் | க்ருத்ரராஜ மஹாஸத்வ ஸம்ஸ்க்ருத: ச மயா வ்ரஜ ‖' (ஆரண்ய 68-29,30) என்றிவை முதலியவற்றால், முக்தி பெற்றவன் அடையத் தக்கதாய்த் திரும்பி வருதலில்லாத லோகத்தை ஜடாயுவுக்குக் கொடுத்தானென்று கூறப்பட்டது.

இவ்விடத்தில், 'யஜ்ஞசீலாநாம் யா கதி: ஆஹிதாக்நே: யா கதி: பூமிப்ரதாயிநாம் யாச கதி: தா:, மயா ஸமநுஜ்ஞாத: கச்ச'=யாகங்களை அனுஷ்டிப்பதில் ஊன்றியவர்களுக்கு அடையத் தக்க உலகம் யாதோ - ஆஹிதாக்நிக்கு (=கார்ஹபத்யம் ஆஹவநீயம் தக்ஷிணாக்நி என்னும் மூன்று அக்நிகளை மூன்று குண்டங்களில் ப்ரதிஷ்டை செய்து அணையாமல் காத்து அவற்றில் நித்யாக்நிஹோத்ரம் செய்யுமவனுக்கு) அடையத்தக்க உலகம் யாதோ-பூமிதானம் செய்யுமவர்களுக்கு அடையத்தக்க உலகம் யாதோ அவ்வுலகங்களையும் என்னால் கட்டளையிடப் பெற்றவனாய்க் கொண்டு நடுவில் அப்ரதானமாக அடையக்கடவாய். 'மயா ஸம்ஸ்க்ருதஸ்ஸந் அபராவர்த்திநாம் யாகதி: தாந் அநுத்தமாந் லோகாந் வ்ரஜ'= என்னால் தஹனம் செய்யப் பெற்றவனாய்க் கொண்டு, 'முக்தி பெற்றவன் மறுபடியும் திரும்பி வருதலில்லை' (ச்சாந்தோ 8-15-1) என்று சொல்லப்பட்டதாய் முக்தி பெற்றவர்களுக்கு அடையத்தக்க உலகம் யாதோ, 'த்யௌ: என்ற இந்த அப்ராக்ருதமான ஸ்தானத்தின் மேல் ஜ்யோதி: எனப்பட்ட யாவனொரு பரமாத்மா விளங்குகிறானோ' (ச்சாந்தோ 3-13-7) என்றிது முதலிய ச்ருதிகளால் கூறப்பட்டுப் பலவகையாகப் பிரிவுண்டு வைகுண்டமென்று

பெயர் பெற்ற மிகவுமுயர்ந்த அந்த லோகங்களைப் பின்பு அடையக் கடவாய் என்று பொருள் கொண்டால், கருதிய பொருள் கிடைப்பதற்காக - நடுவில் படிக்கப்பட்ட 'அபராவர்த்தி நாம் யா ச' என்பது கடைசியில் சேர்க்கப்பட்டதாகையால் குற்றமேது மில்லை. (சொற்கள் படிக்கப்பட்ட முறையில் கருதிய பொருள் கிடைக்காவிட்டால், பொருளுக்கேற்பச் சொற்களை மாற்றியமைத்துப் பொருள் கொள்ளுதல் உற்றதே யன்றோ?)

அல்லது 'யஜ்ஞசீலாநாம் யா கதி:' =யாகமநுஷ்டிக்கும் இயல்பையுடைய இல்லறத்தோர்க்கு அடையத்தக்க உலகம் யாதோ-'ஆஹிதாக்நே: யாகதி:'=தன்னைச் சுற்றி அக்நியை ஸ்தாபித்து அப்பஞ்சாக்நிமத்தியத்தில் இருந்து தவம் செய்வதில் ஊன்றிய வானப்ரஸ்தர்களுக்கு அடையத்தக்க உலகம் யாதோ—'அபராவர்த்தி நாம் யாகதி:'='வனம் செல்லக்கடவன், பிறகு மறுபடியும் திரும்பி வாராதிருக்கக்கடவன்' (?) என்று சொல்லப்பட்ட-துறவிகளுக்கு அடையத்தக்க உலகம் யாதோ - 'பூமிப்ரதாயிநாம் யாகதி:=பூமியில் அனுபவிக்கத்தக்க சுகத்தைவிட்ட நைஷ்டிகப்ரஹ்மசாரிகளுக்கு (=ஆயுள் முழுதும் பிரமசரிய விரதம் பூண்டவர்களுக்கு) அடையத்தக்க உலகம் யாதோ-'தா: மயாத்வம் ஸமநுஜ்ஞாத: கச்ச்ச'=அவ்வுலகங்களை என்னால் கட்டளையிடப்பட்ட நீ செல்லக் கடவாய். 'மயா ஸம்ஸ்க்ருதஸ் ஸந் அநுத்தமாந் லோகாந் வ்ரஜ'=(முற்கூறிய உலகங்களின் வழியாக) என்னால் தஹனம் செய்யப்பட்டவனுய்க் கொண்டு 'த்யௌ: என்ற அப்ராக்ருதஸ்தானத்தின்மேல் (=அப்ராக்ருதஸ்தானத்தில்) வ்யஷ்டிஸ்ருஷ்டியான தேவமநுஷ்யாதிகளுக்கும் ஸமஷ்டிஸ்ருஷ்டியான மஹதாதிகளுக்கும் வெளிப்பட்டவையாய்த் தம்மைக் காட்டிலும் உயர்ந்த உலகம் ஒன்றில்லாதவையாய் மிகவும் உயர்ந்த லோகங்களில் ஜ்யோதி: எனப்பட்ட பரமாத்மா யாவனொருவன் விளங்குகிறானோ' (ச்சாந்தோ 3·13-7) என்றிது முதலான ச்ருதிகளில் பிரசித்தங்களாய் முக்தி பெற்றவர்களால் அடையத் தக்கவையாய் வைகுண்டமென்று பெயரைப் பெற்ற லோகங்களை அடையக் கடவாய் - என்று பொருள் கொண்டால், சொற்களை மாற்றுதல் முதலிய எக்குற்றத்திற்கும் இடமில்லை.

இங்கு முதற் பக்ஷத்தில் திரும்பி வராதவர்களுடையவையாகச் சொல்லப்படுவதனால், அவ்வுலகங்கள் முக்தி பெற்றவர் அடையத் தக்க வைகுண்டமென்னும் பெயர் பெற்ற உலகங்களேயாகும். இரண்டாவது பக்ஷத்திலும் தமக்கு மேற்பட்ட உலகமொன்றில்லாததாகக் கூறப்படுவதனால் அவ்வுலகங்கள் வைகுண்டமென்று பெயரையுடைய - முக்தி பெற்றவர் அடையத்தக்க உலகங்களேயாம். அப்படிப்பட்ட உலகங்கள் இராமசந்திரனால் கழுகரசனை ஜடாயுவுக்குக் கொடுக்கப்பட்டன வாகையால் மோக்ஷமளிக்குந்தன்மையே இங்குக் கூறப்பட்ட விஷயமாகும். மோக்ஷமளித்தலோவென்றால் பரப்ரஹ்மமொன்றுக்கே உரிய தன்மையாகும். பரப்ரஹ்மத்வத்தை விட்டுப் பிரியாத அத்தகைய மோக்ஷமளிக்குந்தன்மை இங்கு இராமசந்திரனாக அவதரித்த விஷ்ணுவினிடம் கூறப்படுவதனால் அதன் வாயிலாக-அத்தன்மை உள்ளவிடத்தில் இருந்தே தீர வேண்டிய பரப்ரஹ்மத்வத்தை விஷ்ணுவினிடம் உள்ளதாகச் சொல்லுவதே வால்மீகி முனிவரால் கருதப்பட்டது. ஆகையால் கூறியதனைத்தும் தூயதேயாம்.

மேலும் அக்காண்டத்திலேயேவேறு சில காரணங்களையும் தொகுத்துக் கூறுகிறார் - 'கிஞ்ச' என்ற ச்லோகத்தினால்.

**ச்லோகம் : 13**

கிஞ்சாபீதி ப்ரதாநாத் சரணமுபகதேப்ய: சரண்யஸ்வபாவாத், ஸம்ஹாரே ஸ்ருஷ்டிகர்மண்ய பிகிலசகநாத் மூர்த்த தர்மத்வகீர்த்தே: |
தேஜஸ் தத்த்யப்ரமேயம் ஜநகதநுபவா யஸ்ய ஸேத்யுக்திரீதே:, சக்தேஸ் ஸௌர்யாதிரோததே ஸுகதி விதரணே சாவதத் ப்ரஹ்ம ராமம் ||

பதவுரை :

கிஞ்ச=மேலும், சரணம் உபகதேப்ய: = தன்னைச் சரணமடைந்த முனிவர்களுக்கு, அபீதிதாநாத்= அபயமளித்தலாலும், சரண்ய ஸ்வபாவாத்=சரணமடையத் தக்க தன்மையினாலும், ஸம்ஹாரே ஸ்ருஷ்டிகர்மணி அபி=அழித்தலிலும் படைத்தலென்ற தொழிலிலும், சகநாத்= சக்தியுள்ளமையினாலும், மூர்த்த தர்மத்வ கீர்த்தே:=வடிவுகொண்ட தருமமாந்தன்மை சொல்லப்படுவதனாலும், ஸா ஜநக தநுபவா=அந்த ஜநகன் மகள், யஸ்ய=எவனுடையவளோ, தத் தேஜ:=அவனுகிய தேஜஸ்ஸானது, அப்ரமேயம் ஹி=அளவிட முடியாததன்றோ?இதி உக்திரீதே:=என்று கூறும் முறைமையினாலும், ஸௌர்யாதி ரோததே=ஸௌர்யன் முதலானவற்றைத் தடுப்பதிலும், ஸுகதி விதரணேச=நற்கதி அளித்தலிலும், சக்தே: = ஆற்றலுள்ளமையினாலும், ராமம்=இராமனை, ப்ரஹ்ம=பரப்ரஹ்மமாக, அவதத்=(முனிவர்) கூறினர்.

விசேடவுரை :

'எல்லோரும் ப்ரஹ்மதேஜஸ்ஸால் அடையப் பட்டவர்கள், முதிர்ந்த அஷ்டாங்கயோக முடையவர்கள், அந்த யோகமொன்றிலேயே ஊன்றிய மனம் பெற்றவர்கள்' (6) என்று கூறப்பட்ட தத்துவ ஞானிகளாய், 'ஆகையால் எங்களைக் காத்தற்காக, சரணமடையத் தக்க உன்னைச் சரணமடைந்தோம்' (19) என்று சரணம் புகுந்த முனிவர்களுக்கு, 'தருமத்தில் அசைவற்ற மனம் படைத்த அவ்விராமன் தபோதநர்க்கு அபயமளித்து' (26) என்று ஆறுவது ஸர்க்கத்தில் இராமபிரான் செய்த அபய தானமும், முனிவர்கள் கூறிய சரண

மடையத்தக்க தன்மையும் அப்பிரானுக்குப் பரப்ரஹ்மத்வத்தை அறிவிக்கின்றன.

'பெரும்புகழ்படைத்தவனும் ஆண் புலியுமான அவ்விராமபிரான் தனது பராக்ரமத்தால் உலகங்களை யழித்து மறுபடியும் படைக்க வல்லவன்' (26) என்று முப்பத்தோராவது ஸர்க்கத்தில் அகம்பனனின் வார்த்தை மூலமாகக் கூறப்பட்டதும், ஜந்மாதி அஸ்ய யத:' (ப்ரஹ்மஸூத்ரம் 1-1-2) இவ்வுலகினுடைய படைப்பு காப்பு அழிவு ஆகியவை எதனால் உண்டாகின்றனவோ அது ப்ரஹ்மம்-என்று ஸூத்ரம் செய்த வ்யாஸ பகவானால் பணிக்கப்பட்டதுமாகிய படைப்பழிப்புக்களில் வல்லமையானது இராமபிரான் பரப்ரஹ்மமாகாவிடில் பொருந்தாதாகையால் அது அப்பெருமானுக்குப் பரப்ரஹ்மத்வத்தைத் தெரிவிக்கின்றது.

'இராமன் வடிவெடுத்த தருமமாவான்' (13) என்று முப்பத்தேழாம் ஸர்க்கத்தில் மாரீசனது பேச்சினால் இராமனது தருமமே வடிவெடுத்த தன்மை கூறியது, யாகாதி நற்கருமங்கள் எல்லாவற்றாலும் ஆராதிக்கப் படுந்தன்மையிலாவது இவ்வுலகப் பயனன்றி மறுமைப் பயனாகிய மோக்ஷத்திற்கு உபாயமாகையால் தருமமாந்தன்மையிலாவது முடிவடைவதாய்க் கொண்டு பரப்ரஹ்மத்திற்கே உரிய தன்மையாகையாலும், 'அந்த ஜனகராஜன் மகள் எவனைச் சேர்ந்தவளோ அவனாகிய தேஜஸ்ஸு அளவிடற்கு அரியது' (18) என்று அந்த மாரீசனது வார்த்தையாலேயே கூறப்பட்டதான எல்லையில்லாத ஒளியாந்தன்மையானது 'த்யௌ: என்ற அப்ராக்ருதஸ்தானத்தின் மேல் எந்த ஜ்யோதிஸ்ஸு விளங்குகிறதோ' (ச்சாந்தோ 3-13-7) என்றிது முதலிய இடங்களில் பரப்ரஹ்மத்தின் ஸ்வபாவமாக ஸ்பஷ்டமாக கோஷிக்கப் படுகையாலும் அவ்விரண்டும் இராமனுருவங்கொண்ட விஷ்ணுவுக்குப் பரமாத்மத்வத்தை உணர்த்துகின்றன.

'இம்மூவுலகிலும் க்ரஹங்களை ஸஞ்சரிக்க வொட்டாமல் தடுப்பேன், சந்திரனை மறைப்பேன், நெருப்பையும் காற்றையும் அழிப்பேன், சூரியனொளியை மறைப்பேன்' (62) என்று தொடங்கி அறுபத்து நான்காவது ஸர்க்கத்தில் கூறப்பட்ட ஸூர்ய சந்த்ராதிகளைத் தடுக்குமாற்றலானது 'இப்பரமாத்வானிடம் அச்சத்தினால் காற்று வீசுகிறது, சூரியன் உதிக்கிறான், அக்நியும் இந்திரனும் தத்தம் கடமைகளைச் செய்கின்றனர், ஐந்தாமவனான யமன் தனது வேலையைச் செய்ய விரைந்து செல்கின்றான்' (தைத்-ஆனந்த 32) என்று தைத்திரீய ச்ருதியில் கூறப்பட்ட ஸூர்யாதி க்ரஹங்களை அடக்கியாளுதலில் முடிவடைவதாய்க் கொண்டு அது இராமனாக அவதரித்த விஷ்ணுவுக்குப் பரப்ரஹ்மத்வத்தை நிலைநாட்டியே தீரும்.

தக்க சமயத்தில், தான் ஸர்வேச்வரன் என்பதைத் தானே வெளிப்படுத்துவதென்பது இதிஹாஸத்தின் நடையினால் அறியப்பட்டது. 'குரக்கினத்தரசே சுக்கிரீவா, பிசாசுகள் அசுரர்கள் யக்ஷர்கள் இப்பூமியிலுள்ள அரக்கர்கள் ஆகிய இவர்கள் ஒரே சமயத்தில் ஒன்று கூடித்திரண்டு வந்தாலும் அவர்களெல்லோரையும் நான் விரும்பினால் எனது விரல் நுனியாலேயே கொன்று விடுவேன்' (யுத்த 18-23) என்றன்றோ விபீஷண சரணாகதி ஸமயத்தில் இராமன் கூறியது.

உபநிஷத்துகளிலும் தன் பெருமையைத் தானே வெளிப்படுத்தும் முறை கேட்கப்படுகிறது. 'என்னையே (=என்னைச் சரீரமாகக் கொண்ட பரமாத்மாவையே) உபாஸநம் செய். என்னையுபாஸனம் செய்வதென்பது யாதொன்றுண்டோ, இதைத் தான் மனுஷ்யனுக்கு ஹிததமமாக - மோக்ஷோபாயமாக நான் நினைக்கிறேன். நான் மூன்று தலைகளையுடைய - த்வஷ்டாவின்மைந்தனை விச்வரூபனைக் கொன்றேன். வேதாந்த சாஸ்திரத்தில் பராமுகரான துறவிகளைக் காட்டு நாய்கள் தின்னும்படிக் கொடுத்தேன். ஆகிலும் நான் செய்யும் பரப்ரஹ்மோபாஸனத்தின் மகிமையினால் அவற்றின் பாபம் எனக்கு ஒட்டவில்லை. நான் ப்ராணனையும் ஜீவனையும் சரீரமாகக் கொண்டவன். அத்தகைய என்னை ஆயுஸ்ஸென்றும் அம்ருதமென்றும் (=நீண்ட ஆயுளோடு கூடி வாழ்வதற்குக் காரணமான ப்ராணனென்றும் அங்ஙனம் வாழ்ந்து ப்ரஹ்மோபாஸனம் செய்யுமவனுக்கு மோக்ஷ காரணமென்றும்) உபாஸனம் செய்யக்கடவாய்' (கௌஷீதகீ 3-8-14) என்று இந்திரன் மனிதருக்கு நன்மை ஏதென்று தன்னைக் கேட்ட ப்ரதர்த்தனனுக்குத் தன் பெருமையைத் தானே வெளியிட்டது காண்க.

(இராமபிரான் இயற்கையாகவே தனக்கேற்பட்ட ஸர்வேச்வரத்வத்தை வெளிப்படுத்தினான். இந்திரனோவெனில் ப்ரஹ்மோபாஸனத்தின் மகிமையினால் தனக்குண்டான பெருமையை வெளிப்படுத்தினானென்று வாசி காணத்தக்கது.)

'ரகுகுலத்திற்கு ஆனந்தமுண்டாக்கும் இராமபிரானே, உனது மங்களமான திருக்கண்ணோக்கத்தினால் நான் தூய்மை பெற்றேன். பகைவரை அடக்குமவனே, உனது திருவருளால் நான் அழிவற்ற (=திரும்பி வருதலில்லாத லோகங்களை) (=ஸ்ரீவைகுண்டத்தை) அடையப் போகிறேன்' (13) என்று எழுபத்து நான்காம் ஸர்க்கத்திலுள்ள சபரி வாக்கியத்தினால் அறிவிக்கப்பட்ட - அழிவற்ற உலகத்தை அளித்தலாகிய மோக்ஷந்தருந்தன்மையானது 'இவனேயன்றோ இம்மை - மறுமையானந்தங்களை அடைவிக்கிறான்' (தைத்-ஆன 7-1) என்றிது முதலான எண்ணற்ற வேத வாக்கியங்களில் கூறப்பட்டு அது பரப்ரஹ்மத்திற்கே உரிய தன்மையென்று முன்பே மூதலிக்கப்பட்டது. ஆதலாலும் இராமனுருக் கொண்ட நாராயணனே பரப்ரஹ்மமென்று நன்கு நிரூபிக்கப்பட்டதென்று கருத்து.

**(தொடரும்)**

# முருகன் திருத்தலங்கள்



தமிழகம் திருக்கோயில்கள் நிறைந்த திருநாடு. தொன்று தொட்டு அருளாளர்கள் பலர் தோன்றி பக்தி நெறியைத் தமிழகத்தில் பரப்பி வந்துள்ளனர். இதனால், இங்கு "மூர்த்தி, தலம், தீர்த்தம் முறையாகப்" பணிந்து, இறைவனுடைய பேரருள் திறத்தில் மூழ்கித் திளைக்கும் மரபு நன்கு வளர்ந்து, சிறந்துள்ளது. "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா" என்பது சான்றோர் வாக்கு. இம்முதுமொழிக்கு இணங்க ஊரெல்லாம், நாடெல்லாம் கோயில்கள் பல, பல்வேறு காலங்களில் அரசர்களாலும், அடியவர்களாலும் எடுக்கப்பட்டுள்ளன. இவ்வாறு கோயில்கள் ஊர்கள் தோறும் அமைக்கப்பட்டிருந்தாலும், சில ஊர்களில் உள்ள கோயில்கள் பேரும் புகழும், சீரும் சிறப்பும், புனிதத் தன்மையோடு தொன்மைச் சிறப்பும் பெற்றனவாக மக்களால் போற்றப்பட்டு வருகின்றன.

**தலங்களின் தோற்றம் :**

இத்தகைய சிறப்பிற்குக் காரணம் அக்கோயில்கள் உள்ள ஊரில் அருளாளர்கள் தோன்றி, அரும்பணியாற்றி இருப்பதாகும்; தேவாரம் பாடிய மூவர் முதலிகளைப் போன்றோ, அருணகிரிநாதரைப் போன்றோ, பக்திச் சுவைதனை நனி சொட்டச் சொட்டப் பாடும் பக்திமான்கள், அக்கோயில்களில் எழுந்தருளியுள்ள இறைவனைப் போற்றிப் பாடி இருப்பதுமாகும்; அல்லது அக்கோயில்களின் உள்ளே அல்லது அருகில் சில மகான்களின் சமாதிகள் அமைக்கப்பட்டு இருப்பதுமாகும். காலப் போக்கில், இக்காரணங்களுள் ஒன்றாலோ, பலவற்றாலோ அக்கோயில்களும், அவை இடம் பெற்றுள்ள ஊர்களும் புனிதத் தன்மையும், புகழும் வாய்ந்தனவாக மக்களால் மதித்துப் போற்றப்படும் நிலையை அடைந்துள்ளன. இத்தகைய ஊர்களையே திருத்தலங்கள் எனச் சுட்டுவது வழக்கமாகும்.

டாக்டர். க. த. திருநாவுக்கரசு
சென்னை-113.

நாம் வழிபடும் கடவுளரின் சிறப்பு மிகு கோயில்களைக் கருத்தில்கொண்டு, அத்தலங்களைச் சிவததலங்கள், சக்தித் தலங்கள், திருமால் தலங்கள், முரு

கன் தலங்கள் எனப் பல வகையாகப் பாகுபடுத்திக் கூறி வருகின்றோம். வழிபடு தெய்வமாகக் குறிப்பிட்ட கடவுளரைப் போற்றும் மக்கள், சிறப்பு நாட்களிலும், திருவிழாக் காலங்களிலும் அவ்வத்தலங்களுக்குச் சென்று, அங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள இறைவனை வழி பட்டு அவனுடைய திருவருளைப் பெற்று மகிழ்கின்றனர்.

முருக வழிபாடு :

இவ்வாறு பெருஞ் சிறப்புற்று இயங்கும் தலங்களுள், முருகப் பெருமானுடைய சிறப்புமிகு திருக்கோயில்களைக் கொண்டவை தமிழ்நாட்டில் நெடுங்காலமாகப் பொன்றாப் புகழ் பெற்று விளங்குகின்றன. தமிழ் மக்கள் எண்ணத் தெரிந்து, அறிவை வளர்த்துக் கருத்து வகையால், முன்னேறத் தொடங்கிய காலம் முதற்கொண்டு, முருக வழிபாடு இந்த நாட்டில் முதன்மையான இறைவழிபாடாக இருந்து வருகிறது.

மலையும் மலைசார்ந்த பகுதியுமாகிய குறிஞ்சி நிலத்தில் தமிழினம் வாழத் தொடங்கிய காலத்திலேயே-இன்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்திலேயே-'சேயோன்' எனப்படும் செந்தில் குமரனுடைய வழிபாடுசிறப்புற்றுவிளங்கலாயிற்று. அக்காலம் முதற்கொண்டு வேலனை வெற்றிக் கடவுளாகவும், குகனைக் குழந்தைத் தெய்வமாகவும், கந்தனைக் காதற் கடவுளாகவும், சாமிநாதனைக் குருபரனாகவும், சித்தர்களுக்கெல்லாம் தலைவனாக விளங்கும் பழனியாண்டியைத் தண்டாயுதபாணியாகவும் தமிழர்களாகிய நாம் போற்றி, வழிபட்டு வருகிறோம்.

முருகனுடைய தலங்கள் :

'அருவாய் உருவாய் உளதாய் இலதாயும்', 'ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமிலார்க்கு ஆயிரம் திருநாமம்' உடையதாயும், பக்தர்களால் போற்றி வணங்கப்படும் முருகனுடைய தலங்கள் பல தமிழகத்தில் உள்ளன. அவற்றுள் பதினெட்டுத் தலங்களைப் பற்றிய வரலாற்றை இங்குக் காண்போம்.

முருகப் பெருமான் அடியார்களுக்கு அருள்பாலிக்க எழுந்தருளியுள்ள தலங்கள் பதினெட்டை இரு வகையாகப் பாகுபடுத்தலாம். சங்க காலத்தின் கடைப்பகுதியில் நக்கீரரால் இயற்றப்பட்டது திருமுருகாற்றுப்படை. அது தமிழில் தோன்றியுள்ள முதல் தோத்திர நூலாகும். அந்நூலில், 'முருகப் பெருமானின் ஆறுபடை வீடுகள்' எனப் பிற்காலத்தவரால் போற்றப்படும் புகழ்மிகு ஆறு திருத்தலங்களின் அமைப்பும், அங்குக் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள ஆறுமுகனின் அழகும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. இவற்றை, நாம் 'பழங்காலத் தலங்கள்' எனலாம். மற்றவற்றைப் பிற்காலத்தலங்கள் எனலாம். 'பழங்காலத் தலங்கள்' எனப்படுபவை, கி. பி. மூன்றும் நூற்றாண்டு அளவிலேயே சிறப்புற்று விளங்கியவை. மற்றவை யாவும் கி. பி. ஆறும் நூற்றாண்டிற்குப் பிறகு, தமிழக வரலாற்றில் இடம் பெற்றவை யாகும்.

பழங்காலத் தலங்கள் :

குமரனுடைய ஆறுபடை வீடுகளையும் பழங்காலத் தலங்கள் எனக் கருதலாம். அவை திருப்பரங்குன்றம், திருச்சீர் அலைவாய், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோறாடல், பழமுதிர்சோலை என்பன. இவற்றைப் 'பத்துப்பாட்டு' எனும் பழந்தமிழ் இலக்கியத்தின் முதற்பாட்டாகிய 'திருமுருகாற்றுப்படை' முதன் முதலாக முறைப்படுத்திக் கூறுகிறது.

1. திருப்பரங்குன்றம் :

ஆறுபடை வீடுகளுள் முதலாவதாக வைத்துப் போற்றப்படுவது திருப்பரங்குன்றம். 'கூடல் மாநகர்' எனும் பெயரால் சிறப்புற்று விளங்கிய, இன்று மதுரை எனும் பெயரால் புகழ்பெற்று விளங்கும் பாண்டி நாட்டின் தலைநகருக்குத் தென்மேற்கில், நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள ஊரே, திருப்பரங்குன்றமாகும். சங்க காலத்தில்,

> சூர்மருங்கு அறுத்த சுடரிலை நெடு வேல்
> சினமிகு முருகன் தண்பரங்குன்றம்
> (அகம். 59)

என மதுரை மருதனிள நாகனாரும்,

> கொடிநுடங்கு மறுகில் கூடல் குடாஅது
> பல்பொறி மஞ்ஞை வெல்கொடி உயரிய
> ஒடியா விழவின் நெடியோன் குன்றம்
> (அகம். 149)

என எருக்காட்டூர்த் தாயங்கண்ணனாரும் திருப்பரங்குன்றினைப் போற்றிப் பாடியுள்ளனர்.

'குருபரன்' கோயில் கொண்டுள்ள குன்றம் எனும் பொருளில் 'பரங்குன்றம்' எனும் வழக்கு உண்டாயிற்று. சங்க காலத்தில் பரங்குன்றின்மீது சோலைகள் மிகுதியாக இருந்தன. மலையினை அருவிகள் அணி செய்தன; சோலைகளாலும், அருவிகளாலும் அக்குன்றம் குளிர்ச்சியாக இருந்தது. இதனால், 'தண்பரங்குன்றம்' எனப் பெயர் பெற்றது. மலைமீது முருகனுடைய கோயில் வீறுடன் விளங்குகிறது. முருகப் பெருமானைப் பாண்டிய அரசன், தன்பட்டத்து அரசியோடும், அமைச்சரோடும் சென்று வழிபட்டான் (பரிபாடல் 19). மக்கள், பல்வேறு வகையான வேண்டுதல்களை முருகனிடம் வேண்டினர்; நேர்த்திக்கடன் செலுத்தினர்; அக்காலத்திலேயே பக்தர்கள் 'காவடி' எடுத்துச் சென்றனர். பரங்குன்றத்தில் அழகிய ஓவிய மண்டபம் ஒன்று அக்காலத்தில் இருந்தது. (பரி. 5, 10).

சூரபதுமனைப் போரில் வென்ற பின், இந்திரனுடைய மகளான தேவயானையை, இத்தலத்தில்தான் முருகப் பெருமான் திருமணம் புரிந்து கொண்டதாகக் கந்தபுராணம் கூறுகிறது. 'மறுவில் கற்பின் வாள்நுதல் கணவன்' என்று நக்கீரர், திருப்பரங்குன்றத்து எழுந்தருளியுள்ள முருகப் பெருமானைக் குறிப்பிட்டுள்ளார். திருப்பரங்குன்றத்து மலையில் சிறப்புமிகு சுனை ஒன்று நெடுங்காலமாக

இருந்து வருகிறது. கோயிலின் குடைவரை பகுதியிலும், பின்பக்கத்துப் பாறை ஒன்றிலும் கி. மு. முதல் நூற்றுண்டைச் சேர்ந்த கல்வெட்டுகள் 'தமிழி' எழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளன. இங்குள்ள கோயிலில், நக்கீரரின் வடிவச்சிலை ஒன்று இடம் பெற்றுள்ளதைக் காணலாம்.

2. திருச்சீர் அலைவாய் :

இத்தலம், கடல் அலைகள் மோதும் கரையோரத்தில் உள்ளது. அலை மோதும் கடற்கரையில் அமைந்துள்ள கோயிலாதலின், 'அலைவாய்' எனப் பெயர் பெற்றது. பின்னர், இப் பெயர் அக்கோயில் உள்ள ஊருக்குப் பெயராகியிருத்தல் கூடும். இது 'செந்தில்' எனும் பெயரும் உடையதாகும். இக்காலத்தில் 'திருச்செந்தூர்' என்று வழங்கப்படுகிறது. இது, திருநெல்வேலி மாவட்டத்தில், கடற்கரையில் காயல் பட்டினத்துக்குத் தெற்கில் இருக்கிறது. இதனைத் திருச்செந்தில், செந்தில், ஜெயந்தி, ஜெயந்திபுரம் எனப் பலவாருக வழங்குவர். இதனைப் பழைய உரையாசிரியரான நச்சினார்க்கினியர், 'நாமனூர் அலைவாய்' எனும் திருப்பதி என்பர்.

திருமணி விளக்கின் அலைவாய்ச்
செருமிகு சேஎய் (அகம். 261)

வெண்டலைப் புணரி யலைக்கும்
செந்தில்
நெடுவேள் நிலைஇய காமன் வியன்
துறை
(புறம். 55)

சீர்கெழு செந்திலும் செங்கோடும்
வெண்குன்றும்
(சிலப். குன்றக். 8)

வரைவயிறு கிழித்த நிழல்திகழ்
நெடுவேல்
திகழ்பூண் முருகன் தீம்புனல்
அலைவாய்.
(தொல். களவு. 23 உரை மேற்கோள்)

எனும் பழம்பாடற்பகுதிகளால், இத் தலத்தின் சிறப்பை அறியலாம்.

முருகப் பெருமான் சூரபதுமனுடன் நடத்திய போர் இங்குத்தான் தொடங்கப் பெற்றது. கோயிலுக்குத் தெற்கே கடல் ஓரத்தில் 'நாழிக் கிணறு' எனப் போற்றப்படும் புண்ணிய தீர்த்தம் ஒன்று உள்ளது. இத் தீர்த்தத்தில் மூழ்கிய ஆதிசங்கரர், தம் நோய் நீங்கப் பெற்றார் என்பர். உடனே 33 பாடல்களைக் கொண்ட 'ஸ்ரீ சுப்ரமண்ய புஜங்கம்' எனும் பாமாலையைப்பாடி, அவர் செந்தில் நாதனை வழிபட்டதாகத் தெரிகிறது.

முந்நூற்று ஐம்பது ஆண்டுகளுக்கு முன்னர் வாழ்ந்த குமரகுருபரர், தாம் பேசும் ஆற்றல் பெற்றவுடன் 'கந்தர் கலிவெண்பாவை' இப்பெருமான் முன்னிலையில் பாடியருளினுர். வைணவ சமயச் சான்றோரான பகழிக் கூத்தர், இங்கு எழுந்தருளியுள்ள முருகப் பெருமான்மீது 'பிள்ளைத் தமிழ்' இலக்கியத்தைப் பக்தியுணர்வு பெருக்கெடுத்து ஓடுமாறு பாடியுள்ளார்.

இங்கு முருகப் பெருமான் ஆறு முகனுக, வள்ளி தெய்வயானைக் கோலத்தோடு காட்சி தருகிறார். இக் காட்சியை நக்கீரர், திருமுகங்கள் ஓராறும் கொண்ட கொள்கையையும், பன்னிரு கையும் பரிவுடன் புரிந்த செயல்களை வியந்து போற்றும் முறையில் சொல்லோவியமாகத் தீட்டியுள்ளார். இத்தலத்தினை 'உலகம் புகழ்ந்த ஓங்குயர் விழுச்சீர் அலைவாய்' (திருமுருகா. 124-125) என்று அவர் போற்றிப் பாடியுள்ளார்.

3. திருஆவி நன்குடி :

இக்காலத்தில் பெரும்புகழ் பெற்று விளங்கும் பழனிமலையின் அடிவாரத்தில் உள்ள தலமே, 'திருவாவின்குடி' யாகும். பண்டைக்காலத்தில்,

முருகன் நற்போர் நெடுவேள் ஆவி
அறுகோட் டியானைப் பொதினி
(அகம். 1)

என்றும்,

முழவுறழ் திணிதோள் நெடுவேள்
ஆவி
பொன்னுடை நெடுநகர்ப் பொதினி
(அகம். 61)

என்றும் போற்றப்பட்ட தலமாகும். இப்பொதினியே, பிற்காலத்தில், 'பழனி' எனத் திரிந்து வழங்கலாயிற்று என்பது ஆராய்ச்சியாளரின் துணிவாகும்.

சங்க காலத்தில் இப்பகுதியை வேளிர் மரபைச் சேர்ந்த ஆவிக்குடியினர் ஆண்டு வந்தனர். அவர்களுள் வேளாவிக்கோப்பெரும்பேகன் எனும் வள்ளல் தலைசிறந்தவனுவான். இத் தகைய ஆவி குடியினர் வாழ்ந்த ஊர், 'ஆவி நன்குடி' எனப்பட்டது போலும். இங்குப் பண்டைக் காலத்தில் முருகன் கோயில் மலையடிவாரத்தில் இருந்தது. இன்றும் அவ்வாறே ஒரு கோயில் இருக்கிறது. இதனையே ஆவினன்குடி என்பர்.

இன்றுள்ள பழனி என்னும் தலத்தில் மலைமீதுள்ள கோயில், நக்கீரர் காலத்தில் இருந்ததாகத் தெரியவில்லை. இது பிற்காலத்தில் தோன்றியது என்பர். (காண்க: பழனித் தல வரலாறு, தேவஸ்தான வெளியீடு பக். 14) கி. பி. பதினைந்தாம் நூற்றுண்டு அளவில் வாழ்ந்த நச்சினார்க்கினியர் எனும் உரையாசிரியர், தம் காலத்தில் 'சித்தன் வாழ்வு' என்று சிறப்புற்று விளங்கிய பழனி தண்டாயுதபாணிக் கோயிலும் திருவாவினன் குடி முருகன் கோயிலும் ஒற்றெனவே மயங்கியுள்ளார். (திருமுரு. 175-76 உரை). ஆனுல், உண்மையில் இரண்டும் வெவ்வேறுனவை. சித்தர்கள் பலர் தங்கி வாழ்ந்த மலைப்பகுதியில், யாரோ ஒரு சித்தரின் சமாதியில் நவபாஷாணத்தாலான தண்டு ஒன்றினைக் கையில் கொண்டுள்ள 'சித்தர் சிலை' அமைக்கப்பட்டு வழிபாடு செய்யப்பட்டது. நாளடைவில், முருகனே துறவியாக—ஆண்டியாக—சித்தநாதனுக அங்கு எழுந்தருளியிருப்பதாக ஒரு மரபு உண்டாயிற்று. அதன் விளைவாக, ஆவினன்குடி சிறப்பை இழக்க, பழனி பெருமையுற்றது. பழனி மலையில், பழனியாண்டவர் கோயிலுக்கு, அருகில் ஒரு சமாதி இருக்கிறது. அதனைப் 'போகர்' எனும் சித்தருடைய சமாதியாக இன்றும் மக்கள் போற்றி வரு

கின்றனர். இதனாலும் பழனிமலையே 'சித்தன் வாழ்வு' எனும் பெயரோடு ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னர் சிறப்புற்று விளங்கியதன் பொருத்தம் புலனாகும்.

சிறப்புமிகு முருகன் அடியாரான அருணகிரிநாதர், கி. பி. பதினைந் தாம் நூற்றாண்டில் வாழ்ந்தவராவர். திருவாவினன்குடி முருகப் பெரு மானையே தம்முடைய திருப்புகழில், அவர் போற்றிப் பாடியுள்ளமையும் பழனியாண்டவர் கோயில் பிற்காலத் தில் தோன்றியது என்பதற்குச் சிறப்புமிகு சான்றாகும்.

இத்தலம், திண்டுக்கல்லிலிருந்து கோயம்புத்தூர் செல்லும் வழியில், 40 கி. மீ. தொலைவில் இருக்கிறது. ஆவினன்குடி முருகனை முனிவரும், கந்தருவரும் வழிபட்டதாக நக்கீரர் கூறுவர். மும்மூர்த்திகளும் இந்திர னும் வந்து காணுமாறு முருகன் அங்கு வீற்றிருந்ததாகத் திருமுரு காற்றுப்படை தெரிவிக்கிறது. இங் குள்ள முருகனை இலுக்குமி, சூரியன், காமதேனு ஆகியோர் வழிபட்டு வீடு பேறு அடைந்ததாகத் தலபுராணம் அறிவிக்கிறது.

4. திருஏரகம் :

திருமுருகாற்றுப்படையில், நக்கீரர் 'ஏரகம்' என்று சுட்டிய தலத்தைப் பற்றிக் கருத்து வேற்றுமை இருந்து வருகிறது. திருமுருகாற்றுப்படையின் உரையாசிரியரான நச்சினார்க்கினியர், 'மலைநாட்டு அகத்ததொரு திருப்பதி' (திருமுரு. 189 உரை) என்று இவ் வூரைக் குறிப்பிட்டுள்ளார். சிலப் பதிகாரம் குன்றக்குரவையுள்

சீர்கெழு செந்திலும், செங்கோடும்
வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்.
(தெய்வம் பராஅ 1-2)

எனும் அடிகளுக்கு உரையெழுதிய அரும்பதவுரைக்காரர் (கி. பி. 13ஆம் நூற்றாண்டு) 'வெண்குன்றினை சுவாமி மலை' என்று சுட்டுகின்றார். இதி லிருந்து ஏரகம் வேறு, சுவாமிமலை வேறு என்பது பெறப்படுகிறது.

'ஏரகம்' என்பது 'ஏழில்மிக்க மலைப்பகுதியில் உள்ள ஊர்' எனப் பொருள்படும். இது மைசூர் மாநிலத் தில், தென்கேனரா வட்டத்தில் உள்ள 'சுப்பிரமணியர்' (குமாரசேத் திரம்) எனும் ஊராகும். இன்றும், அங்கு சுப்பிரமணியர் கோயில் ஒன்று பெருஞ்சிறப்புடன் விளங்கி வரு கிறது. இதையே, நக்கீரர் சுட்டி யுள்ளதாகக் கொள்ளுவதற்கு இட முண்டு. சங்க காலத் தமிழகத்தில், அப்பகுதி 'துளுநாடு' எனும் பெயரு டையதாகவும், தமிழகத்தின் ஒரு பகுதியாகவும் விளங்கியதைப் பதிற் றுப் பத்தும், அகநானூற்றுப் பாடல் களும் தெரிவிக்கின்றன.

ஆனால், பதினைந்தாம் நூற்றாண் டினரான அருணகிரியார்,

காவிரி யாற்றுக்கு ளேவரு
வளமை சோழநன் னாட்டுக்குள் ஏரக
நகரிற் சிர்பெறு மோட்சத்தை
யேதரு-பெருமானே.
(திருப்புகழ் 16)
யாவும்அலை கொண்டு கைத்த காவிரி
புறம்பு சுற்றும்
ஏரகம் அமர்ந்த பச்சை-மயில் வீரா.
(திருப்புகழ் 14)

என்று சோழநாட்டில், காவிரியாற்றங் கரையில் உள்ள ஊரே 'ஏரகம்' எனப் பாடியுள்ளார். இதனைக் கும்ப கோணத்திற்கு மேற்கே ஐந்து கி. மீ. தொலைவில் உள்ள 'சுவாமிமலை' என் பர். இம்மலை செயற்கையாக அமைக்கப்பட்ட குன்றாகும். இங்கு முருகன் தந்தைக்குப் பிரணவப் பொருளை உபதேசம் செய்ததாகக் கூறுவர். இதை மெய்ப்பிக்கும் வகையில், இக்கோயிலின் இரண்டாம் சுற்றாலையில் சிவபெருமான் மடியில் முருகன் அமர்ந்து காதருகில் உப தேசம் செய்யும் சிற்பம் ஒன்று அமைக்கப்பட்டுள்ளதைக் காணலாம். இக்கோயிலின் மூலத்தானத்தில் உள்ள இறைவன், யோக குருவாகப் பெருமிதத் தோற்றத்துடன் காட்சி தருவது, கண்டவர் உள்ளத்தை விட்டு அகலாத் திருக்காட்சியாகும்.

5. குன்றுதோறாடல் :

கந்தனைக் குறிஞ்சி நிலக் கடவுளா கவே மலையில் வாழும் தெய்வமாகப் பண்டைத் தமிழர்கள் வழிபட்டனர். எனவே, அவன் தமிழகத்தின் குன்று கள் தோறும் ஆடல் புரிவதாக நம் பினர். இந்நம்பிக்கையையே, 'குன்று தோறாடல்' எனும் தொடரால், நக் கீரர் புலப்படுத்தியுள்ளார். பொது வாக எல்லா மலைகளிலும் குன்றுகளி லும் அவன் குடிகொண்டுள்ளான் எனும் கருத்தையே இத்தொடர் அறிவிக்கிறது. 'மலைகள் தோறும் சென்று விளையாட்டு அயர்தலும் பெருமானது பண்பு' என்று இதற்கு நச்சினார்க்கினியர் உரைவிளக்கம் தந் துள்ளார். இவற்றைக் கருத்தில் கொண்டு, முருகன் எழுந்தருளியுள்ள திருத்தணி, வள்ளிமலை, திருச்செங் கோடு, மருதமலை, சென்னிமலை, மயிலம், விராலிமலை, குன்றக்குடி, குமரமலை, கழுகுமலை, சுருளிமலை, போன்ற பல மலைத்தலங்களை இதனுள் அடக்கிக் காட்டலாம்.

பழமுதிர் சோலை :

இத்தொடருக்குப் 'பழங்கள் முற் றின சோலைகளையுடைய மலை' என்று உரையாசிரியர் நச்சினார்க்கினியர் பொருள் கூறுவர். ஆனால், குறிப் பிட்ட ஒரு மலையைச் சுட்டி 'இது தான் பழமுதிர்சோலை மலை' என்று அவர் எதையும் குறிப்பிடவில்லை. எனவே, மதுரைக்கு வடகிழக்கே 15 கி. மீ. தொலைவில் உள்ள 'அழகர் கோயில்' எனும் 'திருமாலிருஞ் சோலை'யைப் 'பழமுதிர் சோலை' எனக் கூறுவது பொருத்தமற்றது என்பது ஆராய்ச்சியாளரின் துணிவாகும். இவ்வாறாயின் 'நக்கீரர்' பழமுதிர் சோலை மலை கிழவோனே'—எனப் போற்றும் ஆறுவது தலம் யாது?' எனும் வினா எழுகிறது.

இன்றைக்கு நமக்குக் கிடைத் துள்ள சான்றுகளைக் கொண்டு திட்ட வட்டமாக எம்மலையையும் பழமுதிர் சோலை எனச் சுட்டிக்காட்ட இயல வில்லை. எனவே, மதுரை மாவட்ட மக்கள் இடையே மரபுவழிச் செய்தி யாக இருந்து வரும் 'அழகர் கோயில் உள்ள திருமாலிருஞ் சோலைப் பகுதியே' நக்கீரரால் போற்றப்பட்ட 'பழமுதிர்சோலை' என்பதை, நாம் ஏற்றுக்கொள்ளுவதில் தவறு ஒன்றும் இல்லை. வருங்காலத்தில் செய்யப் படும் தொல்லியல் அகழ்வாராய்ச்சி யால் உண்மை வெளிப்படும் வரை இக்கருத்தை அறிஞருலகம் ஏற்றுப் போற்ற முன்வரும் என நம்புகின் றேன்.

(அடுத்த இதழில் முடியும்)

# காயத்ரீ மஹிமைக் கதைகள்

'காயந்தம் த்ராயதேஇதிகாயத்ரீ' என்பது சாஸ்த்ர வசனம். அதாவது தன்னை ஜபிப்பவரை எப்பொழுதும் காப்பாற்றுவது 'காயத்ரீ மந்தரம்' என்பது பொருள். இந்த காயத்ரீ தேவியை ஸூர்ய மண்டலத்தின் நடுவில் இருப்பதாக பாவித்து த்யானிக்க வேண்டும். காலை வேளையில் அபய முத்ரை, கமண்டலு, ஜபமாலை, தாமரைப்பூ, ஸருவம் என்ற யக்ஞ பாத்ரம் இவைகளை தரித்தவளாகவும், அன்ன வாஹனத்தில் அமர்ந்தவளாகவும் த்யானிக்கவேண்டும். நடுப்பகலில் அபயமுத்ரை,சூலம்,ருத்ராக்ஷ மாலை, கட்டில் காலைப் போன்ற வடிவுடைய ஒருவித தண்டாயுதம் தரித்தவளாகவும், ரிஷப வாஹனத்தில் அமர்ந்தவளாகவும் பாவித்துப் போற்றவேண்டும். மாலை வேளையில் சங்கம், சக்ரம், துளஸீமாலை தரித்தவளாய் அபய முத்ரையுடன் கருட வாஹனத்தில் அமர்ந்தபடி உபாஸிக்கவேண்டும். காயத்ரீதேவி காலை வேளையில் சிவந்த நிறத்துடன் பாலா ரூபிணியாகவும், பகல் வேளையில் வெண்மை நிறத்துடன் யௌவன ரூபிணியாகவும், மாலை வேளையில் கறுத்த நிறுத்துடன் வ்ருத்தா ரூபிணியாகவும் விளங்குபவள். இந்த காயத்ரீ தேவியை உபாஸிக்க ஆவணி மாதம் பௌர்ணமிக்கு மறுநாளான ப்ரதமை திதியுடன் கூடிய நாள் உகந்த தினம் ஆகும். இதை காயத்ரீ ஜபதினம் என்றே குறிப்பிடுவர். சில சமயங்களில் இதை ஆடிமாதத்திலும் கொண்டாடும்படி அமைவது உண்டு. அதாவது வடமொழி மாதங்களில் சிராவணமாதம் க்ருஷ்ணபட்சம் (தேய்பிறை) பிரதமை திதி எப்போது வருகிறதோ அதுவே "காயத்ரீ ஜபதின"மாகும்.

இந்த காயத்ரீ மந்த்ரம் 24 அக்ஷரங்களை உடையது. ஸகல தேவதைகளின் மந்த்ர பீஜங்களும் இதில் அடங்கி உள்ளன. ஸகல விதமான பாபங்களையும் போக்க வல்லது. அத்தகைய காயத்ரீ தேவியின் மஹிமைப் பற்றிய சில விருத்தாந்தங்களைத் தற்போது பார்ப்போம்.

அக்பரது அரசவையில் வீரபலன் (பீர்பால் என்றுமழைப்பர்) என்ற விகடகவி இருந்து வந்தான். ஒரு சமயம் அவன் அரசருடன் மாறுவேடத்தில் நகரத்தில் உலாவிக்கொண்டு இருந்தான். அப்போது ஓர் அந்தணன் அக்பரிடம் கைநீட்டி பிச்சைக்கேட்டான். அக்பர் அவனுக்கு ஏதோ சிறு வெகுமதியை அளித்துவிட்டு, இவனுக்கு பிச்சை எடுப்பதுதான் தொழிலா என்று வீரபலனிடம் கேட்டான். அக்பரது இந்த பரிகாசம் வீரபலனுக்குப் பிடிக்கவில்லை. எனவே மறுநாள் வீரபலன் அந்த அந்தணனை சந்தித்து பிச்சை எடுக்கும் காரணத்தைக் கேட்டான். அவன் தனது குடும்பம் பெரிது என்றும், அதைக் காப்பாற்றவே தான் பிச்சை எடுப்பதாகவும் கூறினான். அதற்கு வீரபலன் அந்தணனிடம் தினசரி உனக்கு பிச்சை எடுப்பதால் எவ்வளவு கிடைக்கும் என்றும் கேட்டான். அதற்கு அந்த மனிதன் சுமார் இருபத்தைந்து காசுகள் கிடைக்கும் என்றான். மேலும் விகடகவி அவனை நீ தினசரி காயத்ரீ ஜபம் செய்வது உண்டா என்று கேட்க, அந்த மனிதன் அதற்கு நேரம் இல்லை என்பதால் செய்வதில்லை என்றான். அதற்கு மறுமொழியாக வீரபலன் தான் இனி தினசரி இருபத்தைந்து காசுகள் தருவதாகவும், இனி பிச்சை எடுக்கக் கூடாது என்றும், ஆனால் தினசரி காலையில் ஸ்நானம் செய்தவுடன் பத்து தடவை காயத்ரீ மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும் என்றும் கேட்டுக் கொண்டான். அவனும் வீரபலனுடைய சொற்படி நடப்பதாகக் கூறினான்.

மறுநாள்முதல் அவ்வந்தணன் நாள் தவறாமல் காயத்ரீ ஜபம் செய்யத் தொடங்கினான். வீரபலனும் நாளுக்கு நாள் மேலும் ஜபம் செய்தால் மேலும் பணம் தருவதாகக் கூறி அவனை ஊக்கப்படுத்தினான். இதனால் அந்த ஏழை மனிதன் நாள் முழுதும் கோடிக் கணக்கில் ஜபம் செய்யத் தொடங்கினான். ஜபம் செய்யச் செய்ய அவன் முகத்தில் அளவற்ற தேஜஸ் ஏற்பட்டது. அவன் கூறுவது எல்லாம் பலிதமாகத் தொடங்கியது. எனவே மக்கள் யாவரும் அவனை மஹான் என்று போற்றிப்பணிந்தனர். ஒரு நாள் அவனுக்கு காயத்ரீ தேவியின் அருளால் ஒரு அசரீரி வாக்கு கேட்டது. "நீ ஜபத்தை இனி பொருளை விரும்பி செய்யாதே! நிஷ்காமமாக செய்வாயாக" என்றது. அதன்படி அவனும் பொருளாசையை அறவே ஒழித்து அம்பாளை உபாஸித்து வந்தான். ஆனால், ஒரு மஹானின் குடும்பத்துக்கு உதவுவதே தங்கட்கு நன்மை என்று மக்கள் அவனது குடும்பத்தை உயர்ந்த நிலை அடையச் செய்தனர். இந்த மஹானைப் பற்றிய செய்தி அக்பர் காது வரை எட்டியது. அக்பர் அவரைப் பற்றி வீரபலனிடம் விசாரித்தார். வீரபலன் நடந்த நிகழ்ச்சிகளை கூறவே அக்பர் தன் செயலுக்கு வருந்தினான். அந்த மஹானையும் சென்று வணங்கினான்.

திரு. B. ரவீந்திரன் B.A.,
திப்பிராஜபுரம்.

நாளடைவில் எவ்வித கோரிக்கையும் இன்றி அம்பாளை உபாஸித்த அந்த மனிதன் காயத்ரீ தேவியின் அருளால் முக்தி அடைந்தான். காயத்ரீ ஜபமஹிமையால் அவன் குடும்பமும் வறுமை நீங்கி சுகவாழ்வு வாழ்ந்தது. இந்த காயத்ரீ மஹிமை பற்றி மற்றொரு கதை உண்டு.

ஒரு ஊரில் ப்ரும்மராக்ஷஸ் என்ற பைசாசம் பிடித்த ஒருவன் துன்பமடைந்தான். அவனுள்ளிருந்த ப்ரும்மராக்ஷஸ் பிறரையும் துன்புறுத்தியது. பல மந்திரவாதிகளின் முயற்சியும் பலனற்றுப் போயின. ஒரு நாள் தேஜஸ் வாய்ந்த ஒரு பிராம்மணன் பிட்சைக்கு வந்து இருந்தான். அவன் பிசாசு பிடித்தவனது வீட்டு வாயிலை அடைந்தான். அவனைக் கண்டதும் அந்த ப்ரும்மராக்ஷம் பிடித்த மனிதன் "உடல் எல்லாம் எரிகிறதே! எரிகிறதே!" என்று ஓலமிட்டான். உடனே வந்திருந்த விருந்தினன் "நீ இவனை விட்டு என்று போகப் போகிறாய்! சொல்" என்றான். "நீ இவனை விட்டுக் கிளம்பா விட்டால் நான் உன்னை எரித்து விடுவேன்" என்றும் அந்த பிட்சைக்கு வந்திருந்தவன் கூறினான். ப்ரும்மராக்ஷஸ் நாளையே ஓடி விடுகிறேன் என்றும், தான் சென்றதற்கு அடையாளமாக அந்த ஊர் நதிக்கரையில் உள்ள ஒரு மரத்தின் பெரிய கிளையை முறித்து ஒரு குறிப்பிட்ட இடத்தில் போட்டுச் செல்வதாகவும் கூறியது. ஒப்புக் கொண்டபடி அன்றிரவே ப்ரும்மராக்ஷஸ் அவனை விட்டு கிளம்பியது. ஊரார் யாவரும் வந்திருந்த மஹானைப் போற்றினர். எந்த மந்த்ரத்துக்கும் கட்டுப்படாத அந்த பைசாசத்தை தாங்கள் எப்படி விரட்டினீர்கள் என்று கேட்டனர். அதற்கு அவர் பல வருடங்களாக தினசரி 1008 தடவை காயத்ரீ ஜபம் செய்து வருவதாகவும், யாவும் அதன் மஹிமையே என்றும் கூறினர். அதன்பிறகு அந்த ப்ரும்மராக்ஷஸ் பிடித்திருந்த மனிதனும் யாவருடனும் ஸஹஜமாசகப் பழகி வரத் தொடங்கினான்.

சில நூற்றாண்டுகட்குமுன் திருநெல்வேலியில் பாண்டிய மன்னன் ஒருவன் இருந்துவந்தான். அவனுக்கு எதனாலும் குணமாகாத வயிற்றுவலி ஏற்பட்டது. அப்போது அரசனிடம் ஒரு ஜோதிடன் இது தங்களுக்குப் பூர்வ ஜன்ம பாபத்தால் ஏற்பட்டது. இதற்கு முறைப்படி சாந்தி செய்து தானம் செய்தால் நீக்கி விடலாம் என்றான். அரசனும் சம்மதித்தான். அதன்படி சாந்தி ஹோமங்களை முடித்து, ஓர் அறையில் அளவற்ற நிதிக்குவியல்களைக் குவிக்கச் செய்தான் அந்த ஜோதிடப் பண்டிதன் பிறகு இரும்பினால் ஒரு எருமைக் கடாவின் உருவத்தையும், யமனின் உருவச்சிலை ஒன்றையும் செய்யச் செய்து விலையுயர்ந்த ரத்ன ஹாரங்கள், கிரீடம் இவற்றை அணிவித்து யமனைக் குறித்து ஜபம், ஹோமம் செய்து, அந்த சிலையில் மந்திரோத்மாக யமனை ஸ்தாபித்து பூசைகள் செய்தான். பிறகு அந்த அறையில் உள்ள செல்வத்தை யார் வேண்டுமானாலும் எடுத்துச் செல்லலாம் என்று நாடு முழுதும் அறிவிக்கும் படி மன்னனிடம் கூறினான்.

மன்னன் அறிவிப்பின்படி பலர் அந்த அறையில் உள்ள நிதிக்குவியல்களைப் பெற எண்ணி அறைக்குள் நுழைந்தனர். ஆனால் உள்ளே நுழைந்த யாவருமே "வீல்" என்று கத்திக் கொண்டு வெளியே ஓடி வந்தனர். காரணம் கேட்டால் யமன் தன்னைக் கொன்று விடுவேன் என்று பயமுறுத்துவதாகக் கூறினார்கள். இதனால் அந்த செல்வத்தைப் பெற யாரும் பலகாலம் முன் வரவில்லை பிறகு ஒரு சமயம், தஞ்சை மாவட்டத்தில் உள்ள பட்டீசுவரம் என்ற ஊரிலிருந்து ஒரு கன்னட பிராம்மணன் சென்று பாண்டிய மன்னனை சந்தித்து அனுமதி பெற்று அந்த குறிப்பிட்ட அறைக்குள் நுழைந்தான்.

உடனே யமன் அந்த அந்தணனைப் பார்த்து மூன்று விரல்களைக் காட்டினான். உடனே வந்திருந்தவன் 'முடியாது' என்றான். அதனால் யமன் அந்தணனிடம் இரண்டு விரல்களைக் காட்டினான். அதற்கும் 'முடியாது' என்று பதில் கூறினான். பிறகு கையைத் தூக்கி ஒரு விரலைக் காட்டினான். அதற்கு அந்தணன் சரியென்று தலையை அசைத்து சம்மதம் தெரிவித்தான். உடனே யமனும் எல்லா நிதிக் குவியல்களையும் எடுத்துச் செல்ல அனுமதி அளித்தான். அரசனின் வயிற்று வலியும் நீங்கியது. அரசன் அந்தணனை அழைத்து நடந்த விபரத்தை தெரிந்து கொண்டான். யமன் விரலைக் காட்டியதன் பொருளைக் கேட்டான்.

அதற்கு அந்தணன், முதலில் யமன் மூன்று விரல்களைக் காட்டி தனது மூன்று வேளை காயத்ரீ ஜபத்தின் பலனைக் கேட்டதாகவும், தான் முடியாது என்று கூறவே 'இரண்டு வேளை ஜபத்தின் புண்ய பலனைத்தா' என்று இரண்டு விரல்களைக் காட்டியதாகவும், அதற்கும் மறுக்கவே யமன் ஒரு விரலைக் காட்டி 'ஒரு வேளை காயத்ரீ ஜபத்தின் பலனையாவது கொடுக்க வேண்டும்' என்று கேட்கத் தான் அதற்கு சம்மதித்ததால்தான் இவ்வளவு நிதிக் குவியலையும் எடுத்துச் செல்ல அனுமதித்தான் என்றும் கூறினான். தான் பல ஆண்டு காலமாக செய்த காய்த்ரீமந்த்ர ஜபத்தின் ஒரு வேளைக்கான புண்ய பலத்தால்தான் இவ்வளவு செல்வமும் கிடைத்தது என்று கூறினான். அரசனும் மகிழ்ந்து அவரை உபசரித்து அனுப்பினான்.

அதன் பிறகு அந்த செல்வத்தால் வறுமை நீங்கி அவ்வந்தணன் ஆயிரம் வேலி நிலம் வாங்கி சுகமாக வாழ்ந்தான். அவன் நினைவாக வெட்டிய கால்வாய் ஒன்று 'கன்னடியன் கால்வாய்' என்ற பெயரில் இன்றும் திருநெல்வேலி ஜில்லாவில் ஓடுகிறது. காயத்ரீ மந்த்ரத்தின் பெருமை அளவிடற்கரியது. அதனால்தான் கேரளத்தை சேர்ந்த நாராயண பட்டத்ரி என்ற கவி தனது நாராயணீய கிரந்தத்தில் (92ஆவது தசகம் ஒன்பதா

வது ச்லோகத்தில்) தனக்கு என்றும் காயத்ரீ மந்த்ர ஜபத்தை செய்யும் புத்தியை அருளும்படி குருவாயூரப் பனை வேண்டுகிருர். காயத்ரீ மஹா மந்த்ரத்தை அக்ஷரத்திற்கு ஒருவர் வீதம் இருபத்தி நான்கு ரிஷிகள் கண்டறிந்தனர். அவர்களாவன: வஸிஷ்டர், பரத்வாஜர், கௌதமர், ப்ருகு, சாண்டில்யர், லோஹிதர், கர்க்கர், சாதாதபர், ஸனத்குமாரர், கச்யபர், அத்ரி, பார்க்கவர், பராசரர், புண்டரீகர், க்ரது, தக்ஷர், அங்கிரஸ், கார்த்திகேயர், முத்கலர், உசனஸ், ரோமசர், மருகர், அகஸ்த்யர், விசுவாமித்ரர். இந்த காயத்ரீ மந்திரத்தில் இருபத்தி மூன்று சந்தஸ்ஸுகள் அடங்கி உள்ளன. அவை காயத்ரீ, உஷ்ணிக், அனுஷ்டுப் ப்ருஹதீ, பங்க்தீ, த்ருஷ்டுப், ஜகதீ, அதி ஜகதீ, பதபங்க்தீ, விஷ்ட்டார பங்க்தி, விராட், அக்ஷர பங்க்தீ, காத்யாயனீ, ஜ்யோதிஷ்மதீ, த்ருஷ்டுப், ஜாகரிதம், ஜகதி, ஸ்ம்ய:,மஹ:, பூ:, புவ:, ஸுவ:, பூர்ப்புவ: ஆகியனவாகும்.

காயத்ரீ மந்திரத்தில் உள்ள 'த' என்ற அக்ஷரம் த்ரிமூர்த்தி ஸ்வரூபமானது. எனவே காயத்ரீயை ஜபித்தால் ஸகல தேவதைகளும் திருப்தி அடைகின்றனர். இந்த மந்திரத்தின் 'யோ' என்ற அக்ஷரம் யமனுடைய ஸ்வரூபமாதலால் இதை ஜபிப்பவர்கள் ம்ருத்யுபயம் நீங்கி தீர்க்காயுள் பெறுவார்கள். இது தவிர காயத்ரீ மந்திரத்தின் 24 அக்ஷரங்கட்கும் தனித்தனியே அதிதேவதைகள் உண்டு. அவர்கள் முறையே அக்னி, வாயு, ஸோமன், ஈசானன், ஆதித்யன், ப்ருஹஸ்பதி, பித்ருக்கள், பரகன், அர்யமா, ஸவிதா, த்வஷ்டா, பூஷன், இந்திரன், வாயு, வாமதேவன், மித்ராவருணர், தாதா, விச்வேதேவர், விஷ்ணு, வாஸவன், ஸர்வதேவதைகள், குபேரன், அச்வினீ தேவர்கள், ப்ரும்ஹா ஆகியோராவர்.

காயத்ரீ மந்த்ரத்தின் இருபத்தி நான்கு அக்ஷரங்களும் ஒவ்வொரு வித நற்பலனைத் தருபவையாகும். அவையவன; மோக்ஷம், ஆரோக்யம், ஐச்வர்யம், க்ரஹதோஷ நிவர்த்தி, வித்யை, ஸந்ததி, விரும்பிய பெண்ணை மணத்தல், தேஜஸ், கீர்த்தி, ஸௌபாக்யம், த்ரைலோக்யமோஹனம், பிறருக்கு அனுக்ரஹம் செய்யும் சக்தி, ஸர்வபாபநாசம், அணிமாதி ஸித்திகள் போன்றவையாவும் கிட்டும். இத்தகைய காயத்ரீ மந்த்ர மஹிமையால்தான் கௌதம முனிவர் ஒரு காலத்தில் உலகத்திற்கு ஏற்பட்ட பஞ்சத்தைத் தீர்த்து வைத்ததாக புராணங்கள் கூறுகின்றன.

உலக ஸ்ருஷ்டியை மஹாவிஷ்ணு தொடங்கியவுடன் அவர் முகத்திலிருந்து முதன் முதலாக தேவதைகளில் அக்னியும், பசுக்களில் ஆடும், மந்த்ரங்களில் காயத்ரீ மந்த்ரமும் தோன்றியதாக வேதம் கூறுகிறது. ஸ்ரீபகவத் கீதையில், பகவான், 'காயத்ரீ சந்தாபாமஹம்'' என்று குறிப்பிடுகிருர். அதாவது ''வேதமந்த்ரங்களில் நான் காயத்ரீயாக இருக்கிறேன்' என்பது பொருள். காயத்ரீ மந்த்ரத்தைப் பற்றி யோக யாக்ஞ வல்க்யர் தனது ஸ்ம்ருதியில்,

> காயத்ரீ வேத ஜனனீ காயத்ரீ
> பாபநாசினீ |
> காயத்ர்யாஸ்து பரம் நாஸ்தி திவி
> சேஹ ச பாவநம் ||

என்று குறிப்பிடுகிருர். அதாவது காயத்ரீ வேதங்களின் தாய். காயத்ரீதேவி பாவங்களை அழிப்பவள். தேவலோகத்திலும் பூலோகத்திலும் காயத்ரீயைக் காட்டிலும் உயர்ந்தது எதுவும் இல்லை என்பது பொருள். இதனை கூர்ம புராணம்,

> "நகாயத்ர்யா: பரம் ஜப்யம் ஏதத்
> விக்ஞான முச்யதே''

என்று கூறுகிறது. அதாவது காயத்ரீ மந்த்ரத்தைக் காட்டிலும் உயர்ந்தது எதுவும் இல்லை என்று கூறுகிறது.

> "தத்ராஸ்ய மாதா ஸாவித்ரீ பிதா
> சாசார்ய உச்யதே''

என்று மனுவும் குறிப்பிடுகிருர். அதாவது தாயாரே காயத்ரீ என்றும், இந்த காயத்ரீ மந்த்ரத்தை உபதேசித்த ஆசார்யன் தந்தைக்கு சமமாக மதிக்கப்பட வேண்டியவன் என்றும் குறிப்பிடுகிறது. இத்தகைய காயத்ரீ மந்த்ர ஜபத்தால் உலகில் அடைய முடியாத எல்லா ஸித்திகளையும் அடைந்து விடுகிருர்கள் என்பதற்காக இதை ஜபிப்பவர்கள் அதற்குரிய முழுப் பலனையும் அடைய மாட்டார்கள் என்று சில ரிஷிகள் சாபம் கொடுத்துள்ளனர். ஆனால் இந்த சாப நிவர்த்திக்காக "காயத்ரீ சாப விமோசன மந்த்ரம்'' என்பதனையும் மஹரிஷிகள் ஏற்படுத்தி வைத்துள்ளனர். எனவே காயத்ரீ ஜபம் செய்பவர்கள் இந்த சாப விமோசன மந்த்ரத்தையும் உடன் ஜபித்தால்தான் பூரண பலன் அடைய முடியும். தவிர, காயத்ரீ மந்த்ரம் ஸித்திக்க வேண்டுமாயின் முதலில் "புரச்சரணம்'' என்ற கர்மாவைச் செய்ய வேண்டும். அதாவது நவக்ரஹப்ரீதி, நாந்திசிராத்தம் முதலியவற்றைச் செய்து, ஒரு புண்ய க்ஷேத்ரத்திற்கு சென்று தங்கி, ஒரு தினத்திற்கு இவ்வளவு ஜபம் வீதம் செய்வது என நிச்சயித்து ஸங்கல்ப்பம் செய்து கொண்டு, காயத்ரீ ஜபத்தை தொடங்கி அந்த குறிப்பிட்ட தினங்களுக்குள் பூர்த்தி செய்ய வேண்டும். குறைந்தபட்சம் காயத்ரீ மந்த்ரத்திற்கு, புரச்சரணம் செய்வது என்ருல், அந்த குறிப்பிட்ட தினங்களுக்குள் 24,000 ஆவர்த்தியாவது ஜபித்து முடிக்க வேண்டும். இந்த "புரச்சரணம்'' என்ற கர்மா எந்த தேவதா மந்த்ர ஜபத்திற்குமே அவசியம் செய்ய வேண்டும்.

இந்த காயத்ரீ மந்த்ரத்தின் பெருமையை மேல் நாட்டு அறிஞர்களான பென்பே (Benbey), கோல்ப்ரூக், கிரிஃபித், டாக்டர் மூர், லீட் பீட்டர், ஜோன்ஸ் ஆகியோர் புகழ்ந்து கூறி உள்ளனர். உதாரணமாக மாக்ஸ் மில்லர்,

"We Meditate On That Adorable Light Of The Divine Savithri Who Should Rouse Our Thoughts".

என்று குறிப்பிடுகிருர். எனவே பரம்பொருளாகிய காயத்ரீதேவியை நாம் த்யானித்து அந்த காயத்ரீ அம்மனின் திருவருளால் எல்லா நலன்களையும்பெற்றுத்திகழ்வோமாகுக. ★

# சித்திரத் திருப்பாவை



## 15. வல்லானைக் கொன்ற மாயனே !

"திருவளர்ச் செல்வமே! இளமை இனிமை பொருந்திய பசுங்கிளியே! என்ன இது? இன்னுமா உறங்குகிறாய்? இன்னமுமா உறக்கம்?..." இப்பாவையின் முற்றத்தில், துயிலினைத் துறந்து வந்த மயில்களெனத் தோழியர்கள் சூழ... வந்து நின்ற கோதை நாச்சியார், நறுமணங்கமழ் தேன் மலர்ச்சரம் தோளில் தவழ, சீரார் வளையொலிப்ப, கொடியேரிடையாட, காதில் நவரத்ன குண்டலங்கள் அசைய, கயல்போல் மிளிருங் கண்ணால் கண்ணுற்றுக் கேட்டாள். மஞ்சத்தில் இருந்து, எழுந்தமர்ந்த இத்தோழி வினவினாள்: "நங்கையே! எம் தலைவியே! 'சில்' லென்று—மனம் புண்ணாகும்படி—அழைக்காதீர்கள்... இதோ வந்து விடுகின்றேன்!..." என்றாள். உடனே கோதை, "நீ—தேனாய் சந்தர்ப்பத்திற்கேற்ற வண்ணம்—கட்டிச் சொல்லுகின்ற வார்த்தைகளினால் சாமர்த்தியம் உள்ளவள். இதற்கு முன்னமேயே உன் வாய்வார்த்தை ஆற்றலை அறிவோம்..." என்றாள். கூந்தல் சரிய, மார்பில் முத்து பவள மாலைகள் சற்று அசைய நிமிர்ந்து, அமர்ந்து கூறினாள் இத்தோழி: "...நீங்கள் தான் சாமர்த்தியசாலிகள்... சரிசரி... நீங்கள் கூறுகின்றபடி நான்தான் சாமர்த்திய சாலியாக இருந்தாலும் இருக்கட்டும்..." என்றாள் வெடுக்கென்று.

புன்முறுவல் தவழ—கனிவுடன்—கன்னலன்ன குரலில் கோதையாள்,... "உனக்கு மட்டும் தன்னந்தனியே வேறு என்ன பணி உள்ளது?..." என்று வினவினாள். மேலும் சற்று துணிவுடன்,... 'ஆமாம், என்னை மட்டும் துயிலெழுப்ப வந்து விட்டாயே' என்று மனதிற்குள் நினைத்த வண்ணம் 'எல்லோரும் வந்து விட்டார்களோ?' என்று கேட்டாள் இத்தோழி.

"வந்து விட்டார்கள்... உனக்கு ஐயமாக இருப்பின், நீயே வெளியில் எழுந்து வந்து எண்ணிப் பார்த்துக் கொள்..." என்று உறுதியாகவும் இறுதியாகவும் கூறிய கோதை, மேலும், "குவலயாபீடம் என்கிற வலிய-கொடிய-யானையைக் கொன்றவனும், எதிரிகளை எதிராக நின்று அழித்தவனுமாகிய ஸ்ரீ கண்ணபிரானை போற்றிப் பாடுவதற்காக நீ விரைவாக எழுந்து வருவாய்..." என்று அழைக்கின்றாள் அன்புடன்.

எல்லே! இளங்கிளியே! இன்னம் உறங்குதியோ!,
சில்லென்றழையேன்மின், நங்கைமீர்! போதர்கின்றேன்
வல்லையுன் கட்டுரைகள் பண்டேஉன் வாயறிதும்!
'வல்லீர்கள் நீங்களே, நானே தானாயிடுக!
ஒல்லை நீ போதாய், உனக்கென்ன வேறுடையை
எல்லாரும் போந்தாரோ? போந்தார் போந்தெண்ணிக்கொள்;
வல்லானை கொன்றானை, மாற்றாரை மாற்றழிக்க
வல்லானை, மாயனைப் பாடேலோரெம்பாவாய்.

'கடல் வண்ணன் கார்மேனிச் செங்கண்ணன்-பாற்கடல்-பங்கயக் கண்ணனைப் பாட' பக்கத்து வீட்டுப் பெண்ணைத் துயிலெழுப்பியதை உணர்ந்த இவள்-அந்தச் சொல்லினிமையில் ஈடுபட்டு-ஓங்கி உலகளந்த உத்தமனின் கீர்த்தியை நுவலிய தாகப் பாடினாளாம். இக்குரலினிமைக் கேட்டுத்தான் 'எல்லே! இளங்கிளியே!' என்று போற்றி அழைக்கிறாளாம். பங்கயக் கண்ணனைத் தன் அங்கத்தினுள், தன் அகத்தினுள் ஏற்றிப் போற்றி ஏகாந்த சேவை இனிய எண்ணத்திற்கு இடையூறாக-'எல்லே இளங்கிளியே!' என்று அழைத்தது படவே, 'சில்லென்று அழையேன்மின்' என்கிறாள். 'பண்டே உன் வாய் அறிதும்...' என்று இவளுடைய பண்பு தெரியுமாதலால் வெடுக்கென பேசினாள் தலைவி. இவளும் சுடச்சுட 'வல்லீர்கள் நீங்களே!' என்று பதில் கூறி விடுகிறாள். ஆனால் சற்று யோசித்து, 'இல்லாதக் குற்றத்தை ஏறிட்டுச் சொல்வானேன்' என்றுணர்ந்து 'பொறுத்தருள வேணும்' என்று பிரார்த்திக்கும் முறையில் 'நானேதான் ஆயிடுக' என்கிறாள்.

தன் உயிர்-உடல்-பொருள் யாவும் ஸ்ரீ கண்ணபிரானே என்று கனவிலும் நனவிலும் எண்ணி எண்ணி, தாயாகவும் தந்தையாகவும் தலைவனாகவும் போற்றி ஆட்கொண்டாள்!

"பெற்றதாய் நீயே பிறப்பித்த தந்தைநீ
மற்றையார் ஆவாரும் நீ பேசில்—எற்றேயோ
மாயமா மாயவளை மாயமுலை வாய்வைத்த
நீ அம்மா காட்டும் நெறி."

என்று நம்மாழ்வார் போற்றி வணங்கும் திருவாக்கிற்கேற்ப கோதை, கடல் வண்ணன் விருப்பம் அதிகரித்தவளாகி, கண்ணனது பிரிவை ஆற்றாத ஆயர் மங்கையர்களில் ஒருத்தியாய் ஆனாள்!

# 16. மாயவன் மணிவண்ணனே!

''திருமால் மேனி ஒத்த முகில்கள் தவழ் ஆயர்பாடித் தலைவராய்த் திகழும் நந்தகோபருடைய, வலிமை பொருந்திய அரண்மனைக் காவல் காக்கும் காவலனே! கொடிகள் தோன்றுகிற தோரண வாசல் காப்பவனே! அழகிய கதவுகளில் எழிலார்ந்த அணிமணிகளால் அமைக்கப்பட்ட இப்பெருங்கதவின் தாழ்ப்பாளைத் திறப்பாயாக! ஆயர்குல ஆரணங்குகளான எங்களுக்கு நோன்புக்குக் கொட்டும்-ஒலிக்கின்ற பறையைத் தருவதாக அரும்பெருஞ் செயல்களை மிகவும் ஆச்சரியப்படத்தக்க முறையில் புரிந்திடும், நீலரத்தினம் போன்ற திருவடிவம் பெற்ற ஸ்ரீ கண்ணபிரான் திருவாக்கு அளித்திருக்கிறான்.

அந்த முகில் வண்ணனை மணிவண்ணன், கண் அன்ன கமலக்கண்ணன், தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கெரிய-நறுமணத் துழாய் மாலையுடன் நவரத்ன மணிகள் தவழ, துயிலணைமேல் கண் வளர்கிறான். குயில் கூவித் துயில் எழுப்பும் முன்னே நாங்கள் சென்று, மாமாயன் எழுவதற்கான திருப்பள்ளி யெழுச்சி இசைப்பதற்குக் கண்ணிலும், கருத்திலும், நெஞ்சிலும், மனத்திலும் களங்கமில்லாதவர்களாக வந்துள்ளோம்.

ஐயா! முதன் முதலில் வேண்டுகின்றோம்! உன் திருவாக்கால் மறுத்து விடாதீர்கள். கண்ணனைக் காண கண்டு தரிசிக்க-தரிசித்து திருப்பள்ளி எழுச்சி பாட-பாடி அவனைத் துயில் எழுப்பிட அனுமதி தருக. பிரியத்துடன் ஒன்றுடன் ஒன்று இணைந்திருக்கும் இப்பெரும் மணிக் கதவுகளைத் திறப்பாயாக''-என்று தன் தோழிகளுடன் கண்ணபிரான் மாளிகையின் முன் வாசலை அடைந்த கோதை காவலர்களிடம் விண்ணப்பித்தாள்.

''நாயகனாய் நின்ற நந்தகோபனுடைய
கோயில் காப்பானே! கொடித் தோன்றும் தோரண
வாயில் காப்பானே! மணிக்கதவம் தாள்திறவாய்!
ஆயர் சிறுமிய ரோமுக்கு அறைபறை
மாயன் மணிவண்ணன் நென்னலே வாய்நேர்ந்தான்
தூயோமாய் வந்தோம் துயிலெழப் பாடுவான்
வாயால் முன்னம் முன்னம் மாற்றாதே அம்மா நீ
நேய நிலைக்கதவம் நீக்கேலோரெம் பாவாய்.

கோதை ஒவ்வொரு மூச்சிலும், பேசும் ஒவ்வொரு பேச்சிலும், கண்ணனின் திருவடிவே மூச்சாக-பேச்சாக-உயிராக இருந்தது. ஆயர்பாடியிலுள்ள, 10 கன்னியர்களை, 6 முதல் 10 வரை தம் பத்துப்பாட்டுக்களால் துயிலெழுப்பினாள். அவர்கள் மற்றவர்களை எழுப்பினார்கள். இது முதல் இனி வரும் ஏழு பாசுரங்கள் வரை (16 முதல் 22 வரை) அரண்மனைக்குச் சென்று தாய் யசோதாவை, தந்தை, நந்தகோபாலரை, அண்ணன் பலதேவனை, தம்பி கண்ணபிரானை துயிலெழுப்பப் போகிறார்கள் இந்நங்கையர்கள்.

'வந்தோம் துயிலெழப் பாடுவான்'. இஃதாவது கண்ணபிரான் துயிலுணர்ந்து எழும்போது 'அந்த எழிலை - அந்த அழகை-போற்றி-வாழ்த்திப் பல்லாண்டுப் பாடுவதையே பரம புருஷார்த்தமாக நினைத்து இங்கு 'வந்தோம்' என்றனர். இவ்வாறு இனிமையாய்-கன்னல் அமுதாய் இவர்கள் இனிய பேச்சை மேலும் மேலும் கேட்க விரும்பி 'ஏதோ மறுத்துக் கூறுவது போல' தோன்றவே 'வாயால் முன்ன முன்னம் மாற்றாதே அம்மா!' என்று வேண்டிக் கொள்கின்றனர்.

'ஆசாரிய' சம்பந்தமுள்ளவர்களை முன்னிட்டு ஆசாரியனைத் தொழ வேண்டும் என்பது இப்பாசுரத்தின் உட்கருத்து ஆகும். 'கண்ணனின் திருவடிகளைத் தவிர வேறு ஒன்றும் அறியேனே' என்ற ஒரே நோக்கத்துடன் நந்தகோபாலருடைய கோயில் முன்னே வந்து நிற்கின்றனர் கோதையும் அவள்தம் தோழிகளும். இக்கருத்தையே,

''சேயன் அணியன் என்சிந்தையுள் நின்ற
மாயன் மணிவாள் ஒளிவெண் தரளங்கள்
வேய்விண்டு உதிர்வேங் கடமாமலைமேய
ஆயன்அடி அல்லது மற்று அறியேனே''

என்று திருமங்கையாழ்வாரும் நினைந்து நினைந்து உருகிக் கோதையைப் போலவே எம்பெருமானைப் போற்றி வணங்குகிறார்.

# திருவவதாரப் பெருமை

'தீதில் நன்னெறி' என்றும் 'தொன்னெறி' என்றும் பழம் பெரும் தமிழர்களால் பேசப்பெறும் நமது பழந் தமிழ்ச் சமயமான வைணவம் பல உயரிய உண்மைக் கொள்கைகளைத் தன்னகத்தே கொண்டுள்ள பரந்த சமயமாகும்.

வைணவம் என்னும் சொல்லிற்குத் திருமாலை மேலான தெய்வமாகக் கொண்ட சமயம் என்பதே பொருளாகும்.

எங்ஙனம் கதிரவனையும் கதிரையும் தனித்தனியே பிரிக்க இயலாதோ அங்ஙனமே திருமாலையும் தர்மத்தையும் தனித்தனியே பிரிக்க இயலாது என்னும் உண்மையை நாம் உணருதல் மிகமிக முக்கியம். எம்பெருமானும் தர்மமும் இணை பிரியாதவை. இதில் ஒன்றில்லாது மற்றொன்றில்லை. இத்தர்மமே நமது வைணவ சமயம்.

தர்மத்தை அண்டை கொண்டு தர்மத்தின் வழி நின்று வைணவ தர்மத்தைப் போற்றி வளர்ப்பதால் மட்டுமே நமது வைணவ சமயம் சிறப்புற்று விளங்கும்.

குறையற்ற தர்மமான வைணவத்தை 'மலையிட்ட தீபமென' எத்திக்கிலும் பிரகாசிக்குமாறு நம்முன்னோர்கள் வைத்துப் போயினர். நம் காலத்தில் அதற்குக் குறை நேரலாகாது. நமது வைணவத்தை நன்குப் போற்றிக் காப்பாற்றி வளர்த்தல் நமது தலையாயக் கடமையாகும்.

தர்மமே வடிவான திருமால் அவதரித்தருளும் பெரும்பேறுடைய புண்ணிய பூமி நமது பாரதமே.

உலகைக் கவியும் இருளைச் சூரியன் அகற்றுகின்றான். ஆனால் மனித குலத்தின் மன இருளைச் சூரியனால் அகற்ற முடியவில்லை. அதற்காகவே எம்பெருமான் அவதரித்து அருள வேண்டுவதாயிற்று.

'ஆய்க்குலமாய் வந்து தோற்றிற்று நம் இறையே' என்பது நம்மாழ்வாரின் திருவாக்கு.

'வேதாந்த விழுப்பொருளே வேய்ங்குழல் ஊதி விளையாடும் வித்தகச் சிறுவன் இறைவன் வந்தருளியது' என்பது பகவத் பாதரின் திருவாக்கு. இவ்விதம் எல்லாம் வல்ல இறைவன் திருவவதரித்தருளுகின்றான் என்கிற பெரியோதோர் உண்மையை-கொள்கையினை ஏற்காத சமயங்கள் வைதீக சமயங்கள் ஆகாது.

இவ்வுண்மையினை வேதாந்த மதங்கள் என்று போற்றப் பெறும் சங்ர-இராமானுஜ-மத்வ மதங்கள் மூன்றுமே ஏற்றுப் போற்றுகின்றன.

பரம கருணாநிதியான இறைவனின் அவதாரங்களில் பூர்ணவதாரம் இரண்டேயாகும். அவை ஸ்ரீஇராமாவதாரமும் ஸ்ரீகிருஷ்ணவதாரமுமாம். இவ்விரண்டு பூர்ணவதாரங்களில் ஸ்ரீகிருஷ்ணவதாரமே பரம பூர்ணவதாரம் என்று வேதாந்தங்களின் முடிவு என்பதே பெரியோர்களின் திருவுள்ளம்.

ஸ்ரீராம - ஸ்ரீகிருஷ்ணவதாரங்களை 'இராம திவாகரன்' என்றும் 'அச்சுத பானு' என்றும் நம்முன்னோர்கள் கூறிப் போந்துள்ளனர்.

அடியார்கட்காகத்தான் தன் இச்சையாற் பல பிறவி எடுக்கின்றான் எம்பெருமான் என்றும், அவனுடைய அவதார மேன்மையை ஞானிகளாலும் அறிய இயலாது என்றும் உள்ள வைணவ சமய மரபுகளை பரிபாடலுள் காணலாம். 'பதினாயிரம் கை முதுமொழி முதல்வ' என்றும் 'வேதத்து மறைநீ' என்றும் 'தொல் இயல் புலவ' என்றும் பலபடியாகப் பரிபாடல் திருமாலை மூலப் பரஞ்சுடராக வருணிக்கிறது.

வைணவ சமயத்திற்கே சிறப்பான தான அவதார நிலையினை 'நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி' என்று கூறி உள்ளதை மணிமேகலையில் காணலாம். இதில் நெடியோன் நிலமிசை மயங்கித் தோன்றி என இயைத்து 'மக்கள் வேறு தான்வேறு என்று தோன்றுதபடி ஒரு நீராகக் கலந்து அவதரித்து' என்கிற பொருளைக் காண்கின்றோம்.

'அவதாரங்களுக்கு ஹேது-இச்சை' என்பது தத்வத்ரய ஸ்ரீ ஸூக்தி, 'பல பிறப்பாய்' 'எந்நின்ற யோநியுமாய்ப் பிறந்தாய்' 'மனிசரும் மற்றும் முற்றுமாய் மாயப் பிறவி பிறந்த' என்னும் படி பஹுவிதமாக சொல்லப்படுகிற எம்பெருமானுடைய அவதாரங்களுக்கு ஹேது-'இப்படி அவதரிப்போம்' என்னும் எம்பெருமானுடைய இச்சையே ஒழிய வேறொன்றுமில்லை. 'ஸம்பவாமி ஆத்ம மாயயா' என்று எம்பெருமானே அருளிச் செய்தானிறே. ஆத்ம மாயயா என்றது தனது இஷ்டப்படி என்றபடி. 'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம், தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே' என்று எம்பெருமான் அருளிச் செய்தபடியே 'எம்பெருமான் பக்கல் பக்தி உள்ள ஸாது ஜனங்களை ரக்ஷிக்கைக்காகவும், தம் பக்தர்களுடைய விரோதிகளான கேடு செய்யும பாபிகளை நாசம் செய்வதற்காகவும், ஸநாதன வைதீக தர்மத்தைக் காப்பாற்றி ஸ்தாபிக்கைக்காகவும் யுகந்தோறும் எம்பெருமான் அவதரித்தருளுகிறான்' என்பதே மேல் ஸ்லோகத்தின் ஸாரமான பொருள்.

இவ்விதம் எம்பெருமானின் அவதாரப் பெருமையை மிகச் சுருக்கமாக அனுபவித்தோமானோம்.

திரு. வி. ரங்காச்சாரி,
சீர்காழி

★

# கூவுமாறு அறிய மாட்டேன் !

ஐம்பெரும் பூதங்களும், கதிரும் மதியும் இப்பிரபஞ்சத்திலுள்ள அனைத்தும் கண்ணன் என்று கண்டு ஆழ்வார் எம்பெருமானை முந்திய பாசுரத்தில் புகழ்ந்தார். அது, एष तु उद्देशत: प्रोक्तो विभूतेः विस्तरो मया - என்னுடைய மிகப் பரந்த விபூதியை உத்தேசமாகத்தான் உனக்குச் சொன்னேன் என்று கண்ணன் கீதையில் அர்ஜுனனுக்குக் கூறியது போல, ஆழ்வாரும் பகவத்குணங்களும் விபூதிகளும் எல்லையற்றனவென்பதை உணர்ந்து கூவுமாறு அறியமாட்டேன் என்று பரவசப்படுகிறார்.

மனுஷ்யானந்தத்தில் தொடங்கி ப்ரஹ்மானந்தம் வரை வர்ணித்துச் சென்ற வேதம் ப்ரஹ்மானந்தத்தின் வாசற்படியிலேயே - Threshold - நின்று மனமிழந்து சொல்லற்று - यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह - மனதினுலும் கூட அப்பால் செல்ல இயலாமல் மனமும் வாக்கும் திரும்பியது என்று வேதம் கோஷிக்கும்போது சிறிய ஞானத்தனை அடியேன் எவ்வாறு பரமனைப் பாராட்ட முடியும் என்று எண்ணி கூவுமாறு அறியமாட்டேன் என்று திகைக்கிருர்.

இவ்வாறு சிறிது திகைத்து நின்ற ஆழ்வார் திருக்கண்களுக்கு முன்பு குன்றங்கள் தோன்றுகின்றன. ஏற்கெனவே திருமாலிருஞ்சோலைமலை, திருவேங்கடமாமலை, திருக்குறுங்குடி மலை முதலிய எம்பெருமான் பொன்மலைகளைப் பாடி இருக்கிருர் அல்லவா? அவைகளும் ஸப்தகுலாசலங்கள் என்ற ஏழுமாமலைகளும் அகக்கண்முன் தோன்றுகின்றன. உடனே குன்றங்கள் அனைத்தும் என்கோ என்று ஆனந்தமடைகிருர்.

வேதமும் பகவத்கீதையும் விஷ்ணு புராணமும் இவ்வாறே போற்றுகின்றன. गिरयश्च सर्वे - குன்றங்கள் அனைத்தும் அவனிடமிருந்து தோன்றுகின்றன; तिष्ठति अन्तरात्मा - இவைகளுக்குள்ளிருக்கும் அந்தராத்மாவாக நாராயணன் இருக்கிருன் என்று வேதம் முழங்குகிறது. मेरु: शिखरिणामहम् - மலைகளுள் நான் மேருவாக இருக்கிறேன் என்றும், स्थावराणां हिमालय: தாவரங்களுக்குள் நான் இமாலயமாய் இருக்கிறேன் என்றும் கண்ணன் கீதையில் பறைசாற்றுகிருன்.

ज्योतींषि विष्णुः भुवनानि विष्णुः
वनानि विष्णुर्गिरयो दिशश्च ।
नद्यः समुद्राश्च स एव सर्वं
यदस्ति यन्नास्ति च विप्रवर्य ॥

என்று விஷ்ணுபுராணத்தில் பராசரர் எம்பெருமானுடைய விபூதிகளைப் புகழுகின்ருர். அதாவது, ஆகாயத்தில் விளங்கும் தாரகைகள் எல்லாம் விஷ்ணு. காடுகள் எல்லாம் விஷ்ணு. மலைகள் யாவும், திசைகள் யாவும் விஷ்ணு. ஆறுகள் எல்லாம் அவன். திசைகள் எல்லாம் அவன். இங்கு என்ன இருக்கின்றதோ, என்ன நம் கண்ணுக்குத் தெரியவில்லையோ எல்லாம் விஷ்ணுவே.

இப்போது ஆழ்வாரின் பாசுரத்தை அனுபவிப்போம்.

கூவுமாறு அறிய மாட்டேன்
குன்றங்கள் அனைத்துமென்கோ!
மேவுசீர்மாரியென்கோ! விளங்கு
தாரகைகளென்கோ!
நாவியல்கலைகளென்கோ!
ஞானநல்லாவியென்கோ!
பாவுசீர்க்கண்ணன் எம்மான்
பங்கயக் கண்ணனையே.

ஆழ்வீர்! கூவுமாறு அறியமாட்டேன் என்று நீர் திகைக்க வேண்டாம். நீர் சொன்னவை மட்டுமல்ல. இதோ குன்றங்கள் அனைத்தையும் பாரும் என்ருன் எம்பெருமான். அவன் காட்டிக் கொடுக்க, குன்றங்கள் அனைத்தும் என்கோ என்று வியப்படைகிருர். அம்மலைகளில் கருமுகில்கள் தோன்றின. மழையும் பொழிந்தது! மேவுசீர்மாரியென்கோ என்று பரவசமடைகின்ருர். அதற்குள் மேகங்கள் மறைந்து ஆகாயம் நின்மலமாகின்றது. கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் புலனுகின்றன. உடனே

திரு. கே. எஸ். கிருஷ்ணன் எம்.ஏ.,
ஸ்ரீரங்கம்.

விளங்கு தாரகைகள் என்கோ என்று பாசுரமிடுகிருர்.

இவ்வாறு இப்பாசுரத்தின் அழகை நாம் அனுபவித்து முன்னர் தந்துள்ள விஷ்ணு புராண சுலோகத்துடன் ஒப்பிடும்போது, பராசரர், வியாஸர், நம்மாழ்வார், வேதமாதா எல்லோரும் நாராயண பராயணர்களாகத் திகழ்ந்து எல்லாம் பரம் பொருளே என்ற உண்மையை உணர்த்தும் பெற்றியராக இருக்கிருர்கள் என்பதைக் காண்கிறோம். மேலே காட்டப்பட்டிருக்கும் பாசுரத்தினுடையவும் விஷ்ணு புராணச் சுலோகத்தினுடையவும் சாயலிலேயே பின்வரும் வேத மந்திரமும் அமைந்திருப்பது நோக்கத்தக்கது.

अतः समुद्रा गिरयश्च सर्वे
अस्मात् स्यन्दन्ते सिन्धवः सर्वरूपाः ।
अतश्च विश्वा ओषधयो रसाश्च
येनैष भूतस्तिष्ठति अन्तरात्मा ॥

அங்கிருந்துதான் கடல்களும் மலை

களும் தோன்றுகின்றன. அங்கிருந்துதான் பல்வேறு தோற்றத்துடன் விளங்கும் ஆறுகளனைத்தும் ஓடுகின்றன. அங்கிருந்துதான் உலக முழுவதிலும் உள்ள பயிர்களும் அவைகளின் சுவையான உணவுப் பொருள்களும் உண்டாகின்றன. அவ்வாறான இந்த சாச்வதமான பரம்பொருள்—பூதம் என்று இங்கு குறிக்கப்படுகின்றது—இவைகள் எல்லாவற்றுக்கும் அந்தராத்மாவாக—Inner Ruler Immortal—எப்போதும் இருக்கின்றது.

இப்போது பாசுரத்திற்குச் செல்வோம். மெவு சீர் மாரியென்கோ என்ற திருவாய்மொழியில் ஒரு ஸ்வாரஸ்யம். மேகம் மலைகளில் தங்கி நன்னீர் மழை பொழிந்து உலகத்தை வாழ்விப்பதுபோல திருமலைகளில் தங்கி நீலமேக சியாமளனை எம்பெருமானும் அருள்மழை சுரந்து அடியார்களை வாழ்விக்கிறான் அல்லவா. அந்த அருளையும் ஆழ்வார் பாராட்டுகிறார்.

நம்மாழ்வார் ஒரு சிறந்த பாசுரத்தில் மேகம் கரிய திருமேனி பெற்றிருப்பதற்குக் காரணத்தை ஊகிக்கிறார்:

மேகங்களோ உரையீர், திருமால்
திருமேனியொக்கும்
யோகங்கள் உங்களுக்கு எவ்வாறு
பெற்றீர் உயிரளிப்பான்
மாகங்கள்தோறும் திரிந்து நன்னீர்
கள் சுமந்து நுந்தம்
ஆகங்கள் நோவ வருந்தும் தவம்
ஆம் அருள் பெற்றதே.

அதாவது ஸர்வ ரக்ஷகனை எம்பெருமானை அனுசரித்து உலகம் வாழ மழை பொழிந்து உயிர்கள் நிலைத்திருக்கும்படி செய்வதால் எம்பெருமான் மேகத்திற்கு ஸாரூப்யத்தைத் தந்தருளியிருக்கிறான் என்று மேகத்தின் யோகத்தைப் பாராட்டியிருக்கிறார்.

மலைகளின் திண்மையும், தண்ணீரின் நீர்மையும், தாரகைகளின் வெம்மையும் எம்பெருமானுக்கே உரிய விபூதிகளாகையால், परास्य शक्तिः विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च -என்று கூறும் உபநிடதவாக்கியத்தின் பொருளை நமக்கு நினைவூட்டுகின்றார். அதாவது அந்த எம்பெருமானது ஆற்றல் மிகப் பெரியது. அளவிட முடியாதது. அது வேறு வேறு தன்மையானது. அவனுடைய அறிவும் ஆற்றலும் செயலும் யார் உரைக்கவல்லரே! இவ்வாறு ஒன்றுக்கொன்று முரணாகத் தோன்றும் பண்புகள் எம்பெருமானுக்கு இயற்கையாகவே விளங்குகின்றன என்று விளக்குகிறார்.

எம்பெருமானுடைய வேறு சில ஆச்சரியமான சக்திகளையும் ஆழ்வார் நமக்கு எடுத்துக்காட்டுகிறார். பெரும்பொருள்களைத் தோற்றுவித்து அவற்றின் உள்ளுறை உயிராகவும் இருக்கும் எம்பெருமான் லலிதமான கலைகளுக்கும் காரணனாக இருக்கிறான் என்கிறார். நாவியல் கலைகளென்கோ! ஞானநல்லாவியென்கோ என்று அவனுடைய அளப்பரிய சக்திகளை வியந்து உண்மையாகவே கூறுமாறறிய மாட்டேன் என் கண்ணனுடைய ஆச்சரியமான லீலா விபூதிகளையென்று உள்ளம் பூரிக்கிறார்.

यो ब्रह्माणं विदधाति पूर्वं
यो वै वेदांश्च प्रहिणोति तस्मै ।
तं ह देवं आत्मबुद्धिप्रकाशम्
मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये ।।

'எவன் ஆதியில் பிரமதேவனைப் பிறப்பித்து அவனுக்கு வேதங்களனைத்தையும் தந்தருளினானோ அந்த ஆத்மபுத்தி ப்ரகாசகனை—ஆன்மாவுக்கும் புத்திக்கும் ஒளியைத் தந்தருளும் தேவ தேவனை பரம்பொருளை மோட்சத்தை விரும்பும் நான் சரணமடைகிறேன்', என்று கூறும் உபநிடத வாக்கியத்தை ஆழ்வார் நமக்கு நினைவூட்டுகிறார். அதனாலேயே நாவியல்கலைகளென்கோ என்பதுடன் ஞான நல்லாவியென்கோ என்று சேர்த்துச் சொல்லுகிறார். ஞானமே நிரூபகமான உயர் நலனுடைய பரமான்மா என்று பொருள். அதையே உபநிடதம் ஆத்மபுத்தி ப்ரகாசம் என்று கூறுகிறது.

கண்ணனும் கீதையில் மேரு, இமயம், கடல் முதலிய பெரும் பொருள்கள் எல்லாம் நான் என்று சொல்லி வந்தவன் अक्षराणां अकारोऽस्मि - எழுத்துக்களுக்குள் நான் அகாரமாக இருக்கிறேன் என்றும் वेदानां साम-वेदोऽस्मि-வேதங்களுக்குள் நான் ஸாமவேதமாக இருக்கிறேன் என்றும், गिरां अस्मि एकमक्षरं - சொற்களுக்குள் நான் ஓரெழுத்துச் சொல்லான ஓங்காரம் என்றும் கூறுமுகத்தால் கலைகளுக்கும் மற்றும் சாத்திரங்களுக்கும் மூலமான வேதத்தைச் சொல்லி கலைகள் எல்லாம் நானே என்று அறுதியிடுகிறான். कीर्तिः श्रीर्वाक् च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा பெண்களுக்கே உரிய புகழ், செல்வம், சொல்வன்மை, மனத்திட்பம் பொறுமை, போன்ற பெண்பாற் சொற்களால் குறிக்கப்படும் பண்புகளெல்லாம் நானே என்று கூறியிருப்பது நமது நினைவுக்கு வருகின்றது.

आत्मबुद्धिप्रकाश என்று பரம்பொருளை நிரூபித்த உபநிடதம் அதையே आत्मा-ज्ञानमयो अमलः - பரம்பொருளே அறிவின் உருவாக மலமற்றதாக இருக்கின்றதென்று கூறுகிறது. அதை விளக்குமுகத்தான் நம்மாழ்வார் ஞான நல்லாவி என்று எம்பெருமானைக் குறிப்பிடுகிறார். இவ்வாறான பல்வேறு விசித்திரமான விபூதிகளையுடைய பெருமான் பங்கயக் கண்ணன் என்கிறார். ஸ்ரீமந் நாராயணனை கண்ணனெம்பெருமான் எப்பொழுதும் தாமரைத்தடங் கண்ணன். பரப்ரஹ்மநிலையில் कप्यासं पुण्डरीकमेवमक्षिणी என்று வேதம் வரையறுத்தது. அதாவது செழுமையான நீரில் ஊறியிருக்கும் தண்டில் சூரிய கிரணங்களால் மலரும் செந்தாமரை போன்ற கண்களையுடையவன் என்பது பொருள். வியூகத்திலும் செந்தாமரைக் கண்ணன் என்றே வர்ணிக்கப்படுகிறான். விபவமெனப்படும் அவதாரங்களிலும் கண்களே அவனுடைய பரஸ்வரூபத்தைக் காட்டிக் கொடுக்கின்றன. வராஹாவதாரத்தில் स्फुरत्पद्मलोचनः - மலர்ந்த செந்தாமரைக் கண்ணன் என்று பேசப்படுகிறான். இராமபிரான், कमलपत्राक्षः, राजीवलोचनः, पुष्कराक्षः என்று அனுமனும் தசரதனும் சிவபெருமானும் போற்றும்படி கண்ணழகு பெற்றவனாக இருக்கிறான்: கண்ணனும் அர்ஜுனனால் कमलपत्राक्ष என்றே அழைக்கப்படுகிறான்.

ஆகவே லீலா விபூதியிலுள்ள எல்லாப் பொருள்களுக்கும் அந்தராத்மாக இருப்பவன் பங்கயக் கண்ணன் என்று அறுதியிடுகிறார் நம்மாழ்வார்.

# திருக்கண்ணங்குடி நின்றான்

தஞ்சை மாவட்டத்தில் உள்ள புகழ்பெற்ற வைணவத் திருப்பதிகளுள் திருக்கண்ணங்குடியும் ஒன்று. திருவாரூர் - நாகப்பட்டினம் ரெயில் மார்க்கத்தில் கீவளூர் ரெயில் நிலயத்திற்கருகில் இருக்கிறது இவ்வூர். நிலயத்தில் இறங்கி ரெயில் தண்டவாளத்தின் ஓரமாக வடபுறம் கிழக்கே அரை மைல் சென்றால் இத்தலத்தையடையலாம்; பஞ்ச கிருஷ்ண ஸ்தலங்களில் ஒன்றாகக் கருதப்படுகிறது இந்த ஸ்தலம்! ரெயிலில் செல்லும் போது கோபுரமும் ஆலயமும் நன்கு காட்சியளிக்கும்.



திருமங்கையாழ்வார் சரித்திரத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டு அவரால் பாடப்பெற்றது இத்தலம். ஸ்ரீரங்கத்தில் மதில் கட்டுவதற்குப் பொருள் வேண்டியிருந்தது. நாகப்பட்டினத்திலும் ஒரு பௌத்த விகாரையில் பொன் புத்த விக்ரகம் இருந்ததாக அறிந்தார், திருமங்கை மன்னன். அதைத் தமது நண்பர்கள் உதவி கொண்டு ஓர் இரவு களவு செய்து கொண்டு வந்தார்.

அவர் திருக்கண்ணங்குடியை அடைந்தபோது பொழுது நன்றாக விடிந்துவிட்டது. பொற்சிலையை அங்கே ஓர் வயலில் குழிவெட்டிப் புதைத்து, அதன்மேல் காய்ந்த புற்களையும் வாழைச் சருகுகளையும் போட்டு மூடி மறைத்துவிட்டார்; காண்பவருக்குக் குழிவெட்டிய சுவடுகளே தெரியாது எனலாம்.

அன்று வயலை உழுவதற்கு நிலத்துச் சொந்தக்காரன் பகல் பத்து மணிக்கு வந்தான். அப்போது திருமங்கை மன்னன் அந்த நிலத்தில் தமக்கு உரிமை இருக்கிறதென்று கூறி உழுவதைத் தடை செய்தார்; பெரிய கலகமே உண்டாயிற்று; இறுதியில் வியவகாரம் ஊர்ப் பஞ்சாயத்துக்குச் சென்றது.

நிலத்தைப் பற்றிய பிராதை மறுநாள் விசாரிப்பதென்று ஊர்ப் பெரியர் முடிவு செய்தனர். அன்றைய இரவு, புதைத்து வைத்திருந்த சிலையை எடுத்துக் கொண்டு திருமங்கை மன்னன் ஊரைவிட்டுப் புறப்பட்டுச் சென்று விட்டார், தன் பரிவாரங்களுடன்.

பொழுது விடிந்ததும் பிராதை விசாரிக்க இருதரத்தாரையும் அழைத்த போது திருமங்கை மன்னனைக் காணவில்லை. நிலத்தின் உரிமையை ஆட்சேபித்தவரைக் காணாமையால், இந்த விநோத வழக்கு ஊர்க்காரர்களுக்குச் சாதகமாய் முடிந்தது. திருமங்கை மன்னன் வீண் வழக்காடிய இடமாதலால் 'தோரா வழக்கு'த் திருக்கண்ணங்குடி என்ற பெயர் பிரசித்தமாயிற்று.

'உறங்காப்புளி, ஊறாக் கிணறு, காயா வகுளம், தோரா வழக்குத் திருக்கண்ணங்குடி' என்ற பழமொழி இப்பகுதியில் வழங்கி வருகிறது. உண்மை; வெறும் புகழ்ச்சியில்லை.

புத்த விக்ரஹத்தைப் புதைத்து வைத்த வயல் அருகே இரவில் மூடாத இலைகளுடைய புளியமரம் இருந்ததால் 'உறங்காப்புளி' என்று பெயர் பெற்றிருக்கிறது. தற்சமயம் புளிய மரத்தைக் காண முடியாது; வயல் மட்டும் உள்ளது.

சன்மிஷ்டை
தஞ்சை.

பெருமாள் கருப்பக் கிரகத்துக்குப் பின்னால் ஒரு வகுள மரம் இருக்கிறது. அதில் பூவும் காயும் இருந்தாலும் விதையை நட்டால் முளைப்பதில்லை. இதன் பொருட்டு அதற்குக் 'காயா வகுளம்' (வகுளம்: மகிழ மரம்) என்று பெயர். இதுவே இத்தலத்தின் தலவிருக்ஷம்.

பழமையும் பெருமையும் மிக்க வகுள மரத்தடியில் பிரமன், கௌதமர், உபரி சரவசு, பிருகு, மாடரர் ஆகியோர்க்கு பகவான் சேவை சாதித்ததாக ஐதீகம்;

எனவே இங்கு தல விருக்ஷத்தையும் தரிசனம் செய்யலாம்!

இம்மகிழ மரத்தடியில் திருமங்கை மன்னன் படுத்திருந்தாராம்! அச்சமயம் வகுள மரத்திற்கு அருகிலுள்ள கிணற்றில் வயதான ஓர் அம்மையார், நீர் எடுத்தாராம்! அந்த அம்மையாரிடம் பருக நீர் கேட்டாராம் ஆழ்வார். அதற்கு அந்த அம்மையார் 'வயல் என்னுடையது என்று சொந்தம் கொண்டாடியதுபோல், செம்பும் என்னுடையது என்று சொல்லி விடுவாய்' என்று அவருக்கு நீர் தர மறுத்து விட்டாராம்! அதனால், திருமங்கை மன்னன் மிக்க கோபம் அடைந்து அந்தக் கிணற்றை 'ஊறுக்கிணறு'க்கிச் சபித்தாராம்; இன்றும் கிணறு உள்ளது. ஆனால் நீர் இல்லை என்பது குறிப்பு.

**கோயில் :**

திருக்கோயில் தொன்மைச் சிறப்பு வாய்ந்தது. மதிலும், சுவரும், தள வரிசையும் செங்கற்களால் அமைந்தவை. கருவறை மட்டும் கற்றளி. ஐந்து நிலைக்கோபுரம் வாயிலை அலங்கரிக்கிறது. கோயிலுக்குப் பின்னே 'சிரவண புஷ்கரிணி' உள்ளது.

இத்தலத்துப் பெருமானுக்குலோக நாதன் என்ற பெயரும் உற்சவருக்குத் தாமோதர நாராயணன் என்ற பெயரும் வழங்கப்படுகின்றன; மூலவருக்குச் சாமமாமேனியன் என்று மற்றொரு பெயரும் உண்டு. 'சாமமாமேனி என் தலைவன்' என்று திருமங்கை மன்னனும் பாடியுள்ளதைக் காணலாம்.

தேவியராகிய மூலவருக்கு லோக நாயகி என்ற பெயரும், உற்சவருக்கு அரவிந்த நாயகி என்ற பெயரும் வழங்கப்படுகின்றன. பெருமாள் நின்ற திருக்கோலத்தில் ஸ்ரீதேவி, பூதேவி, கௌதமர், உபரிசரவசு, பிருகு, பிரம்மா ஆகியோருடன் உத்பல விமானத்தின் கீழ் எழுந்தருளியிருக்கிறார்.

தேக சுகம் கருதாது வற்றி உலர்ந்த உடலுடையவரான முமுக்ஷுக்களை உத்பலர் என்பர். அவர்களை ரட்சிக்கப் பரிந்தருளும் பெருமாள் உறையும் கருவறை விமானம் 'உத்பலாவதகம்' எனப்படும். இத்தகைய முமுக்ஷுக்கள் பகவானை வகுள மரத்தின் கீழிருந்து ஆராதித்து வந்தனர். பெருமாள் பிருகு முனிவருக்கும், கௌமதருக்கும் பிரத்தியட்சமானதாக ஐதீகம்.

அரவிந்த நாயகி நாச்சியார் தனிச் சந்நிதியில் எழுந்தருளியிருக்கிறாள்; மகாவரப் பிரசாதி எனப்பிரசித்தம். ஆறு அங்கங்கள், ஐந்து வேள்விகள், நால்வேதம் ஆகியவை பயின்று மூன்று ஏரிகளைச் செங்கையால் வளர்க்கும் அந்தணச் சிரேஷ்டர்கள் இத்தலத்தில் மிகுந்திருந்தனர் என்கிறார் ஆழ்வார்.

பறிக்கைக்கு உரிய நெய்தல் முதலான மலர்கள் அலரப் பெற்ற கழனிகளைக் கொண்டது ஊர். ஒளிவீசும் மாடங்களும் திண்ணிய மதில்களும் சூழப் பெற்றது. புன்னை, மல்லிகை, முல்லை ஆகிய மலர்களில் அளாவி தென்றல் காற்று எல்லாப் பக்கங்களிலும் வீசும். குலைகள் நிறைந்த வாழைத் தோப்புக்களும், ஓங்கிய பாக்கு மரங்களும், குரவம், பலா, மா, குருக்கத்தி ஆகிய மரச்சோலைகள் எங்கணும் சூழ்ந்துள்ளன.

ஆற்றுவெள்ளம் சக்ய பர்வதத்திலிருந்து ரத்னங்கள், மரகதம், வைரம், மூங்கில் உதிர்ந்த முத்துக்கள் ஆகியவற்றை நீர் போக்கில் கொண்டு வந்து தள்ளி இக்கழனிகளை நிரப்புகின்றனவாம். வண்டுகள் சோலைகளிடையே பண்ணிசைப் பாடி ரீங்காரம் செய்கின்றனவாம்.

(44-ம் பக்கம் பார்க்க)

# இராம காதையில் கண்ணன்

திரு. எல். பி. சம்பத்,
செங்கல்பட்டு.

வான்மீகி முனிபுங்கவரின் வடமொழிப் படைப்பை முதல் நூலாகக் கொண்டு குருகைப் பிரானின் குரை கழல் பணிந்து, தன் குல தெய்வமான ஸ்ரீலக்ஷ்மி நிருஸிம்ஹனை வணங்கி, குலோத்துங்க சோழனின் விருப்பத் திற்கிணங்கி, தீந்தமிழில் இராமாயணத்தைப் புனைந்தான் கவிச்சக்ர வர்த்தி கம்பன். அதற்கு 'இராமாவதாரம்' என்ற திருநாமத்தையும் சூட்டி நாம் இன்று படித்து மகிழ உயர்ந்த காவியத்தைக் கொடுத்தான்.

கம்பன், சக்ரவர்த்தித் திருமகனின் பரிபூர்ண கடாக்ஷத்தாலும் நாமகளின் அனுக்ரஹத்தாலும் சொற் சொரிவும் பொருட் பொலிவும் பெற்று நீர்வளம், நிலவளம், இயற்கையழகு, பக்ஷி, மிருகவர்க்கங்கள், அவைகளுடைய குணாதிசயங்கள், மனோ தத்துவம், காப்பியத்திற்கு வேண்டிய அணிகலன்களாகத் திகழும் நவ ரஸங்களையும் புகுத்தி, தான் வாழ்ந்த 'ஓங்கு பெருஞ்செந்நெல் ஊடுகயலுகளும்'காவிரி நாட்டைக் காண்பித்து, கங்கை பாயும் சமவெளிக்கு ஏற்றம் கொடுத்துள்ளான். அணிகளை ஆங்காங்கே சந்தர்ப்பத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்றவாறு சமைத்துப் படிக்கும் நம்மை சமைந்த பொம்மைகளாக அசைவற்ற அசரமாக்கி விடுகிறான்.

இந்த மாக்காதையில் திருமாலின் முன் திருவவதாரங்கள் விவரித்த இடங்கள் பல உள. முக்கியமாக "திரு விக்ரம ந்ருஸிம்ஹா" வதாரங்களாகும். பின் கூறிய அவதாரத்தை வான்மீகி பகவானின் சிறிய வடமொழிச் சொற்றொடரிலிருந்து கரு கிடைக்க, அதை "இரண்யவதைப் படலம்" என்று விபீஷணன் வாயிலாக தன் காமாந்தக தமையனுக்கு அறிவு புகட்டும் வகையில் அமைத்து, இந்த காவியத்தைப் படிக்கும் பக்தர்கள், மேலே சொல்லப்பட்ட பரிபூர்ண மான அவதாரங்களையும் சேர்த்து அனுசந்திக்க வேண்டுமென்ற உயர்ந்த நோக்கோடு சேர்த்துள்ளான். கவிச் சக்ரவர்த்தி சிற்சில விடங்களில் பெருமாளின் அவதாரங்களை உபமான மாகவும் காண்பித்துள்ளான்.

கண்ணனுடைய அவதாரம் துவாபர யுகத்தில் ஏற்பட்டிருந்த போதிலும் கம்பன் தன்னுடைய கவிதைத் திறனில் அதையும் விட்டு வைக்கவில்லை. சொல்லவந்தக் கதைக்குப் பிறகு வந்த அவதாரத்தைப் பயன் படுத்துவது கவிகளின் மரபு. ஏனென்றால் சொல்ல வந்தவர் சொல்லப் பட்ட அவதாரங்களுப் பிறகு தோன்றினவரல்லவா.ஒரு தனிச்சிறப்புமிக்க அம்ஸத்தை விளங்க வைக்க கவிகள் உபமானங்களுக்கு கால வித்தியாசங் களைப் பார்ப்பதில்லை. அத்தன்மையாக கம்பன் பாலகாண்டத்தில் வரும் 'ஆற்றுப் படலத்தில்' சரயு நதியை வர்ணிக்குமிடத்துப் பின்வரும் பாசுரத்தைக் கண்ணனுடைய பால்ய விளையாட்டுகளை மனதில் உன்னி உபமான மாக அமைத்துள்ளது மிகவும் நேர்த்தி.

செறிநருந்தயிரும், பாலும், வெண்ணெயும் சேர்ந்தநெய்யும்
உறியொடு வாரி உண்டு, குருந்தொடு மருதம் உந்தி
மறியுடை ஆயர்மாதர் வனைதுகில் வாரும் நீரால்
பொறி வரிஅரவின் ஆடும் புனிதனும் போலும் அன்றே.

சரயு முல்லை நிலத்தில் பாய்ந்தோடியதை அந்நிலத்துக்குரித்தான வளப்பங்களை வர்ணித்து கிருஷ்ண பகவானுக்கும் அந்த வெள்ளத்துக்குமுள்ள பொதுத் தன்மைகளைப் பளிங்கு போல தெள்ளென விளக்குகிறான். யமுனை நதியில் மான் விழி மாதர் கோபியர்களுடன் கூடி குதூகலமாய் விளையாடிக் கொண்டிருக்கையில் அவர்களுடைய துகில்களையெல்லாம் கவர்ந்து கொண்டு நதிக்கரையிலுள்ள குருந்த மரத்திலேறி நிற்க, தன் தமையனுன பலராமன் அங்கு வருவதைக் கண்டு அஞ்சி குருந்த மரம் யமுனையாற்றில் விழுமாறு முறித்து துகில்களை கோபஸ்திரிகளிடம் கொடுத்து நீந்தி வேற்றிடம் சென்றதுவும், வளர்த்த தாயாகிய யசோதை கண்ணனின் சேஷ்டிதங்களைத் தாங்காது மருத மரத்தில் அவனுடைய உதரத்தில் கயிறு ஒன்றால் கட்டிப் போட்டு ஒரு உரலில் பிணைத்துவிட அதை இழுத்துக் கொண்டு மருத மரத்தை இரு கூறுகப் பிளந்ததுவும், யமுனு நதியின் ஓர் மடுவின் மத்தியில் காளியன் என்னும் பல தலை நாகம் விஷத்தைக் கக்கி அந்தப் புனித நீரை அருந்துவதற்கு யோக்யதை இல்லாதபடிச் செய்ததைக் கண்டுஅதன் தலைகளில் தன் பிஞ்சுப்பாதங்களை வைத்து நர்த்தனமாடி அந்த அரவை வேறொரு இடத்திற்கு மாற்றியதையும் படம் பிடித்துக் காட்டுகிறார். கவியின் கண்கள் முன் சரயு நதியானது யமுனைத் துறைவனை ஞாபகப் படுத்தியது போலும்! மேலும் சரயுநதி தன்னுடைய வேகமான கதியில் கரையோரங்களிலுள்ள மரங்களை வேரொடு அறுத்துத்தள்ளி அவைகள் நதியில் மூழ்கி மூழ்கி மிதக்கும் காட்சி கிருஷ்ண பரமாத்வாவின் காளிங்க நர்த்தனத்தை நினைவு கூறும்படியாகவுமுள்ளது.

அயோத்யா காண்டத்தில் பாரத்வாஜ ஆஸ்ரமத்திலிருந்து மறை நாலும் நடம் நவில் திருநாவானுகிய முனிவரிடம் விடை பெற்று செங்கண் நாயகனும், திருவின் பொலிவுறும் செல்வியும், கைங்கர்யத்தில் இளைக்காத இளையானும் சித்திரக்கூடம் நோக்கிச் செல்ல, வழியில் யமுனை நதி குறுக்கிட அகமகிழ்ந்து நெடும் புனல் நீராடி காய்கனிகள் உண்டு, நீர் பருகி நதியை கடப்பதெப்படி என்று யோசிக்கும் வேளையில் இலக்ஷ்மணன் ஒரு தெப்பம் சமைத்தான். எவ்வாறு?

## தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00
(நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 ,, 6-30 ,, —சுத்தி—முதல்மணி
6-30 ,, 11-30 மதியம்—ஸர்வதரிசனம்
11-30 ,, 12-30 ,, —சுத்தி, 2-வது மணி
12-00 ,, 6-00 மாலை —ஸர்வதரிசனம்
6-00 ,, 6-30 ,, —சுத்தி, 3-வது மணி
6-30 ,, 9-15 இரவு —ஸர்வதரிசனம்
9-15 ,, 9-30 ,, —சுத்தி, ஏகாந்தசேவை

காலை

## வெள்ளிக்கிழமைகளில்

9-00 ,, 10-00 ,, —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு)

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

வாங்கு வேய்ங்கழை துணித்தனன்;
மாணையின் கொடியால்
ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து,
அதன் உம்பரின் உலம்போல
வீங்குதோள் அண்ணல் தேவியோடு
இனிது வீற்றிருப்ப
நீங்கினுன், அந்த நெடுநதி, இருகை
யால் நீந்தி
(கம்பராமாயணம்)

பாலகாண்டப் பாசுரத்தில் சரயுவை யமுனைக்கு உபமானம் சொல்லும் வேளையில் கிருஷ்ணனுடைய சேஷ்டிதங்கள் மனதில் தோன்ற அதை வெளிப்படையாக விவரித்துள்ளான் கவிமேதை கம்பன்.

இப்பாசுரத்தில் கவியரசன் பின்னே வரப்போகும் கிருஷ்ணவதாரத்தை சூட்சமமாக நம் சிந்தனைக்கு வேலை கொடுக்குமளவிற்குப் புகுத்தியுள்ளான். யமுனையென்றால் எல்லோருக்கும் கண்ணன் ஞாபகம்தான் வரும். காளிந்தி(யமுனை)யைக் கடப்பதற்கு இளைய பெருமாள் தெப்பம் ஒன்று அமைக்க "வாங்கு வேய்ங்கழை துணிந்தனன்" அதாவது இரண்டு விதமான மூங்கில்களை வெட்டி உபயோகித்துள்ளார்; ஒன்று 'வேய்' மற்றொன்று "கழை"; முதலில் கூறியது துளையுள்ள மூங்கிலாகும்; பின்னே சொல்லப்பட்டது துளையில்லாத கெட்டி மூங்கிலாகும். இவைகளை குறுக்காகவும் நெடுக்காகவும் காட்டிலே படரும் ஒருவிதக் கொடிகளால் பிணைத்து, அதன் மேல் குன்றென உயர்ந்த குவவுத்தோள் அண்ணலையும் அவன் தன் தேவியையும் இனிதாக வீற்றிருக்கச் செய்து நாம் திவ்ய தம்பதிகளை சேவிக்க தெப்ப உத்ஸவத்தை நடத்திக காண்பிக்கிறுன் கவிசார்வபௌமன். பின்வரும் அவதாரத்திற்கு முன்னோடியாகவும் சூசனையாகவும் துளையுள்ள மூங்கில் (வேய்) குழலூதவும், கெட்டியான மூங்கில் (கழை) ஆவினம் மேய்க்க உதவப் போகிறது என்ற வகையில் கண்ணபிரானை யமுனையோடு இணைத்து நம்மையும் ஆனந்தம் என்கின்ற நதியில் அர்த்த புஷ்டியினுல் மூக்கில் விரலை வைக்கும்படி மூழ்க வைக்கிறுன் கம்பநாட்டாழ்வான். ★

# திருமலையில் திருப்பவித்திரத் திருநாள்

மக்கள் அனைவரும் எளிதில் அணுகி வணங்கி வழிபடக் கூடிய வகையில் இறைவன், தேவதைகளினுலோ, ரிஷிகளினுலோ, மானுடர்களினுலோ நிறுவப்பட்டிருக்கும் ஆலயங்களில் அல்லது ஸ்வயம்வ்யக்தமான, அதாவது, தாமாகவே தம்மைப் பகவான் வெளிப்படுத்திக் கொண்ட திருத்தலக்கோயில்களில், அர்ச்சா ரூபமாக எழுந்தருளி அவர்களுக்கு அருள்புரிந்து வருவது கண்கூடு. ஆலய நிருமாணம், தேவதா மூர்த்தங்களின் பிரதிஷ்டை, அவற்றிற்கான பூஜைகளின் செய்முறை, அர்ச்சகர்களின் தகுதிகள், பூஜைத் திரவியங்கள் முதலியவைபற்றிய விவரங்கள் ஆகம நூல்களில் விரிவாக எடுத்துரைக்கப் பெற்றுள்ளன.

ஆகம நுணுக்கங்கள் அறிந்த பெரியோர்களினுல் பூஜைகள் நிகழ்த்தப் பெற்று வந்தாலும், சாத்திரங்களில் கூறியுள்ளதற் கிணங்கத் திட்டமாக வழிபாடுகளைச் செய்வது என்பதில் அறியாமை காரணமாகவும், வேறு சில தவிர்க்க முடியாத சமூக மற்றும் அரசியல் காரணங்களினுலும் பல வகைக் குறைபாடுகள் ஏற்படுவது இயல்பேயாகும். எனவே, அத்தகைய குறைபாடுகளினுல் விளையக்கூடிய தீய விளைவுகளைக் களையும் பொருட்டு, கழுவாயாக 'பவித்திரோற்சவம்' அல்லது 'புனிதப்படுத்தும் திருவிழா' என்பது ஆண்டுதோறும் ஒவ்வொரு கோயிலிலும் நிகழ்த்தப் பெறல் வேண்டும் என விதிக்கப்பட்டுள்ளது. தவிரவும், இவ்விழாவினுல் காட்டில் வளம் பெருகும், அனைத்துலகிலும் அமைதி நிலவும், குறைகள்யாவும் நீங்கப் பெற்று நல்வாழ்வு ஓங்கும் மற்றும் கோரிய விருப்பங்கள் யாவும் நிறைவேறும் என்றும் ஆகமங்கள் கூறுகின்றன.

'பலி' அல்லது வேள்வி உணவு வழங்கப்படும் கோயில்வளாகத்தைச் சேர்ந்த குறிப்பிட்ட இடங்களுக்குள் அடங்கியிருக்கும் பரப்பில் நிகழும் தீட்டுச் செயல்களினுல் ஏற்படும் தூய்மையின்மையினை அகற்றுவதற்கான 'சம்ப்ரோக்ஷணம்' என்பதினின்றும் இது வேறுனது என்பதை அறியவேண்டும்.

எனினும், இத்திருப்பவித்திரத் திருநாள் எப்போதுமே தொடர்ந்து நடைபெற்று வந்துள்ளது என்பதற்கான வரலாற்றுச் சான்றுகளை இருப்பதாகத் தெரியவில்லை.

வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்ட நாளிலிருந்து நின்ற திருக்கோலத்தில் அருள் வழங்கிக்கொண்டிருப்பதாகக் கருதப்படும் திருவேங்கடவன் திருக்கோவிலில், இவ்விழா பற்றி முதல் முதலாகக் கிடைக்கும்

திரு. அ. நடராஜன் — திருப்பதி.

சரித்திரச் சான்று கி.பி.15 ஆம் நூற்றுண்டின் பிற்பகுதியைச் சார்ந்ததேயாகும். கி. பி. 1464 ஜனவரி 18ஆம் நாள் சாளுவ நரசிம்மனின் நெருங்கிய உறவினனும், எர்ர கம்பய்ய தேவ மகாராஜனின் குமாரனுமான ஸ்ரீமன் மகாமண்டலேசுவரமேதினி மீஸாரகண்ட கட்டாரி சாளுவ மல்லய்ய தேவ மகாராஜன் முதன் முதலாகத் திருவேங்கடவனுக்குத் திருப்பவித்திர நாள் எனப்படும் பவித்திரோற்சவத்தை ஏற்பாடு செய்ததாகத் தெரிகிறது. ஆவணி (சிராவணம்) வளர்பிறை தசமியன்று தொடங்கி ஐந்து நாட்கள் நடைபெற வேண்டும் என ஆணை பிறப்பித்ததாகத் தெரிகிறது. அதன்படி, தசமி அன்று இரவில் அங்குரார்ப்பணம் செய்து, ஏகாதசி அன்று திருமாமணி மண்டபத்தை அழகுற அலங்கரித்து, துவாதசி நாளன்று மூன்று உற்சவமூர்த்திகளுக்கும் தர்ப்பைப் புல்லினுலோ அல்லது பட்டு நூலினுலோ ஆன மோதிர வடிவிலுள்ள பவித்ரத்தை அணிவித்து, அவற்றுக்குச் செய்ய வேண்டிய புனிதச்சடங்குகளை நடத்தி அதன்பின்னர் திருவீதிகளில் அவற்றை உலா எழுந்தருளச் செய்தனர். கல்வெட்டில், பன்னிரண்டாவது நாளான துவாதசியன்று நடைபெறும் முக்கிய நிகழ்ச்சி மட்டுமே காணப்பட்டாலும், ஐந்து தினங்களுக்கு உற்சவம் நடக்கவேண்டும் என்று சாஸனம் கூறுவதால், அது அதற்கடுத்த இரண்டு நாட்களிலும் தொடர்ந்து நிகழ்த்தப் பெற்றிருக்க வேண்டும்.

இந்த உற்சவத்தில் நிவேதனத்திற்கு ஏராளமான பிரசாதங்கள் படைப்பதற்கு ஏற்பாடு செய்யப் பெற்றிருந்ததாகவும் கல்வெட்டுக்களிலிருந்து அறிய முடிகிறது.

கி. பி. 1495 பிப்ரவரி 17 ஆம் நாள் சந்திரிகிரியைச் சேர்ந்த ஒரு பிராம்மணப் படைத்தலைவனை திம்மண்ண தண்டநாயகர் திருப்பவித்திரத்திருநாளின் துவக்கத்தன்று அப்பப் படி ஒன்றிற்கு நிவந்தம் ஏற்படுத்தினர். (படி என்பது குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள எண் அளவைக் குறிப்பதாகும்). 1495 ஆகஸ்ட் 31 அன்று கந்தாடை இராமாநுஜய்யங்கார் பவித்திரத் திருநாளின் போது ஒவ்வொரு நாளும் ஓர் அப்பப்படிக்கு ஏற்பாடு செய்தார். கி.பி. 1504 செப்டம்பர் 20 ஆம் நாள், திருவேங்கடச் சிறுக்கன் திருப்பணிப் பிள்ளை எம்பெருமானுர் என்பவர் ஒவ்வொரு நாளும் ஐந்து அதிரஸப் படிக்கு நிவந்தம் வழங்கினர்.

மேலே குறிப்பிடப்பெற்ற கி. பி. 1464 ஆண்டுக் கல்வெட்டில் விழா பற்றிய விவரங்களோடுகூட, விழாவில் பயன்படுத்தப்படும் பொருள்கள், அவற்றிற்காகும் செலவு, அதில் பங்கு பெறும் வெவ்வேறு நபர்களுக்கு கொடுக்கப்படும் பணங்களின் அளவு போன்றனவும் குறிக்கப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, ஸோம கும்பம் (நீர்க்குடம்), பிரதிமை (தெய்வத்தின் சிறிய பிம்பம்), மலைக்கினிய நின்ற பெருமாளுக்கான யஞ்ஞோப வீதம் (பூணூல்) ஆகியவற்றுக்கான விலை 103 பணங்கள்; விழாவை நடத்தி வைக்கும் ஆச்சாரியரின் கைகள் மற்றும் காதுகள் ஆகியவற்றின் அணிகளின் மதிப்பு 10 பணங்கள்; தட்சிணை, பசு தானம், சுவர்ணதானம் ஆகியவற்றின் மதிப்பு 12 பணங்கள்; ஐந்து பொருள்களினுலான (கம்பளி விரிப்பு, பஞ்சு மெத்தை, மயிலிறகு, மான் தோல், பட்டுச் சீலை) பஞ்ச சயனம் என்னும் படுக்கையின் விலை 40 பணங்கள், புராணங்கள் படிக்கும் பட்டர்களுக்கும் வேதம் ஓதுபவர்களுக்கும் சன்மானமாக 5 பணமும் தட்சிணையாக 10 பணமும் கொடுக்கப்பட்டன. 20 பலம் பட்டு நூலும் 200 பலம் வெள்ளை நூலும் பயன்படுத்தப்பட்டன. வெண்மை தவிர, நூல்களுக்கு கறுப்பு, சிவப்பு, பச்சை, மஞ்சள் சாயங்கள் ஏற்றப்பட்டன. சாயம் போடுபவர்களுக்கு 3¾ பணம் கொடுக்கப்பட்டது. மரத்தினுல் செய்குன்றையும் (பர்வதத்தையும்) சம்பிரதாயமான மகர தோரணப் பிரபையினையும் செய்யும் ஆச்சாரிக்கும் குயவர்களுக்கும் கூலி தரப்பட்டது. இச் செலவுகள் அனைத்தின் மொத்தத்தொகை 198¾ பணமாகும். அங்குரார்ப்பணம் அல்லது, திருமுளை விடுவதற்கும் கலசங்களுக்கு அடியில் பரப்புவதற்கும் ஏராளமான நெல் உபயோகிக்கப்பட்டது. மேலும், தேன், பால், தயிர், நெய், எள் ஆகியனவும் பயன்படுத்தப்பட்டன.

ஐந்து நிறங்களில் தயாரிக்கப்பெற்ற நூலினுலான மாலைகள் பெருமாளுக்கு அணிவிக்கப்பட்டன. பஞ்சு நூலைப் பட்டு நூலினுல் முடியிட்டு, பவித்ர மாலைகள் மணிகளினுலான மாலைகள் போன்று தோற்றமளிக்கும்படி செய்யப்பட்டது.

உற்சவத்தின்போது இடைவிடாத வேத கோஷம், புராணபடனம் ஆகியவற்ருேடு கூட நடைபெற்ற ஓமங்கள் கோயிலைச் சுற்றியுள்ள பகுதிக்கு ஒரு புனிதப் பிரபையையும் சூழலையும் ஏற்படுத்தின என்ருல் மிகையாகாது.

கி. பி. 1562 வரை இந்த உற்சவம் நடைபெற்றதாகத் தெரிகின்றது. எப்போது, எதற்காக இது நிறுத்தப்பட்டது என்பது பற்றிய விவரம் எதுவும் தெரியவில்லை. ஒரு வேளை, இப் பவித்ரோற்சவத்தைக் கொண்டாடுவதற்கென வழங்கப்பெற்ற எலம்பாக்கம், எலமண்டியம், விக்கிரமாதித்யமங்கலம் முதலிய கிராமங்கள் அரசியல் மாறுபாடுகளினுல் இழக்கப்பட்டதும் ஒரு காரணமாயிருக்கக்கூடும்.

ஏறத்தாழ நான்கு நூற்ருண்டுகளாக நடைபெருதிருந்த இத் திருப்பவித்ரோற்சவம் சில ஆண்டுகளுக்கு முன்பு சமயப் பெரியார்களின் அறிவுரையின் பேரில் மீண்டும் துவக்கப்பெற்றது. ஆனுல், இப்போது இவ்விழா ஆவணி வளர்பிறை தசமியன்று இரவில் தொடங்கி ஏகாதசி, துவாதசி, திரயோதசி ஆகிய மூன்று நாட்கள் மட்டும் கொண்டாடப்பெற்று வருகிறது. தசமி அன்று இரவு அங்குரார்ப்பணம்; மறுநாள் பவித்திரப் பிரதிஷ்டை; அடுத்த நாள் பவித்திர சமர்ப்பணம்; கடைசி நாள் பூர்ணுஹுதி.

இப்பவித்ரோற்சவத்தில் பக்தர்களும் பணம் செலுத்திப் பங்கு கொள்ளலாம். அறம், பொருள் மற்றும் இன்பம் நிறைந்த நல்வாழ்வினை விரும்புவோர் இத்திருநாளைச் செய்தாலும் செய்வித்தாலும் அவர்கள் விருப்பங்கள் கைகூடி எல்லாப் பேறுகளையும் பெற்று மகிழ்வர் என்று ஆகம நூல்கள் உறுதி கூறுகின்றன. (இவ்வகையில் இப்பவித்ரோற்சவம் இம்மாதம் 4, 5, 6 தேதிகளில் திருமலையில் நடைபெற உள்ளது.)

---

(13-ம் பக்கத் தொடர்ச்சி)

மூப்பின்றி வாழ முடிகிறது என்கிருர்.

தனக்கு உவமை இல்லாதவன் இறைவன். ஈடு இணையில்லாதவன், தனக்குத் தானே ஒப்பு. காந்தியடிகளுக்கு இணை காந்தியடிகளே. அவருக்கு ஒப்பாக வேறு யாரையும் கூற இயலாது. கடவுளுக்கு நிகர் கடவுளே ஆவார்.

கடைசி எட்டாவது குணமாக அறவாழி அந்தணனுகிய அறக்கடலை உணர்த்தினுன்.

அழுக்காறு அவாவெகுளி இன்னுச்
சொல் இந்நான்கும்
இழுக்கா இயன்றது அறம்.

என மனத்தின்கண் இந்த நான்கு மாசுகளையும் அகற்றியிருத்தலாகும். அவை பொருமை, ஆசை, சினம், கடுஞ்சொல் ஆகியவற்றை நீக்கி வாழ்பவனே இறைவன்.

மனிதன், இந்த எட்டு குணங்களையும் அடைந்து இறைமையில் திளைத்து நம் முன்னேர் இறைவனுடன் ஒன்ருகக் கலந்தவாறு கலப்பானுக.



# நம்மாழ்வார்

தென் பாண்டி நாட்டில் கடம்பூர் கால்வாய்க்கும் தாமிரபரணி நதிக்கும் இடையில் திருக்கூர்பதி அமைந்துள்ளது. அப்பதியில் கலியுகம் பிறந்த நாற்பத்து மூன்றாவது நாள் (கி. மு. 3102) பிரமாதி வருடம் வைகாசித் திங்கள் முழு மதியோடு கூடிய விசாக நட்சத்திரத்தன்று, காரியார் என்ற சிற்றரசருக்கும் உடைய நங்கையார் என்ற மாதர் திலகத்திற்கும் திருமகவாய் நம்மாழ்வார் தோன்றினார். ஆராய்ச்சியாளர்கள், நம்மாழ்வார் காலத்தைப் பற்றி ஒருமுகமான முடிவுக்கு இன்னும் வரவில்லை. இதுகாறும் செய்த ஆராய்ச்சிகளை நோக்குமிடத்து, நம்மாழ்வார் நான்காம் நூற்றாண்டிற்கும் எட்டாம் நூற்றாண்டிற்கும் இடைப்பட்ட காலத்தினராக இருக்கலாம் என்று கருதப்பெறுகின்றது.

சடகோபர் என்ற திருநாமம் பெற்ற இவர் (பிறந்தவுடன் சடத்தை கோபித்த காரணத்தினால் சடகோபர் என்றழைக்கப்பட்டார்) மற்ற குழந்தைகளைப் போன்று பாலுண்ணல், அழுதல் முதலிய செயல்களின்றிக் கண்மூடி மௌனியாக இருந்தார். இது கண்டு வியப்புற்ற பெற்றோர் சில நாள் சென்றபின் தம் குழந்தையுடன் அவ்வூரிலுள்ள ஆதிநாதர் கோயிலுக்குச் சென்றனர். சடகோபர், மெல்லத் தவழ்ந்து சென்று பிரகாரத்திலிருந்த திருப்புளியின் (புளிய மரம்) அடியில் அமர்ந்தார். உணவும் நீரும் இன்றி இருந்தும், குழந்தையின் உடல் வளர்ச்சி குறையவில்லை. இவ்வாறு இருக்கும்போது, வடதிசையினின்றும் தெற்கு நோக்கி வரும் திருக்கோளூர் யோகி மதுரகவிக்கு ஓர் இரவில் அதிசயப் பேரொளி ஏற்பட்டது. அவ்வொளியை இரவில் பார்த்துக் கொண்டு திருக்குருகூர் வந்தடைந்து திருப்புளியின் கீழிருந்த நம்மாழ்வாரைக் கண்டார் மதுரகவி. குழந்தை நம்மாழ்வாரிடம் "செத்ததின் வயிற்றில் சிறியது கிடந்தால், எத்தைத் தின்று எங்கே கிடக்கும்" என்ற வினாவைத் தொடுக்க அதற்கு "அத்தைத் தின்று அங்கே கிடக்கும்" என்ற விடையை அக்குழந்தை நம்மாழ்வார் பதில் அளித்தார். இப்பதிலைக் கேட்டு, நம்மாழ்வாரை மகாஞானி என்றறிந்து தம்முடைய குருநாதராகக் கொண்டார். நம்மாழ்வார், காலக்கிரமத்தில் திருவாய் மொழி, திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி என்ற திவ்விய பிரபந்தங்களை அருளிச் செய்தார். மதுரகவியாழ்வார் அவற்றைப் பீட்டோலை செய்து கொண்டார். மற்றைய ஆழ்வார்களால் பாடப் பெறாத மலைநாட்டுத் திருப்பதிகள் இவரால் பாடப் பெற்றன. மதுரகவி தம் குருநாதருக்கு உருவம் அமைத்து, கோயில் கட்டித் திருவிழா முதலியன நடைபெற ஏற்பாடு செய்தார். நம்மாழ்வார் மற்ற ஆழ்வார்களுக்குத் தலைவராக விளங்குகிறார். இவருக்குக் கரிமாறன், வகுளாபரணன், திருக்குருகைப் பெருமாள், பராங்குசன், திருநாவீரன், விசாகப் பெருமாள், பிள்ளைப் பெருமாள் முதலிய பெயர்களுண்டு.

நம்மாழ்வார் நம் எல்லோருக்குமே சொந்தம் உடையவர். ஆதலின் நம்மாழ்வார் என்று பெயர் பெற்றார். திருக்குருகூரில் ஆழ்வார் பிறந்த காரணத்தால் அவ்வூர் ஆழ்வார் திருநகரி என வழங்கலாயிற்று. மதுரகவியாழ்வார் என்பவர் கடவுளைப் பாடாது, அவர் அடியாருள் தலை சிறந்தவரும், 'வேதத் தமிழ் செய்த வித்தகர்' என்று பாராட்டப்பட்ட நம்மாழ்வாரைப் பாடியதிலிருந்து இவருடைய சிறப்பினை அறியலாம். மதுரகவி 'வேதம் பகர்ந்திட்ட மெய்ப்பொருளின் உட்பொருளை ஓதும் சடகோபன் ஊர்' என்று நம்மாழ்வார் பிறந்த பதியைச் சிறப்பித்துள்ளார்.

தமிழ்நாட்டில் தோன்றிய நம்மாழ்வார் உலகு உய்யத் தோன்றிய குருமூர்த்திகளுள் ஒருவர். இயல்பால் மெய்யுணர்வு பெற்று, எல்லாவற்றிற்கும் அடிப்படையான வித்தினை உணர்ந்தார். உணர்ந்தவாறு உலகுக்கு உணர்த்தினார்.

இவையும் அவையும் உவையும்
இவரும் அவரும் உவரும்
யவையும் யவரும் தன்னுள்ளே
ஆகியும் ஆக்கியும் காக்கும்
அவைகள் தனிமுதல் எம்மான்

என்று குறிப்பிடுகிறார்.

காவியங்களிலும், ஓவியங்களிலும் பிறந்த இறைவனின் வடிவங்கள் பலவாகும். அவ்வடிவங்களைக் கொண்டு எழுந்த புராணங்களும் பலப்பல. எல்லாவற்றிலும் நீக்கமற நிறைந்து நின்று, எல்லாவற்றையும் உருப்படுத்தும் இறை, சித்தாய்ப் பொலிகிறது. அதுவே அதன் தொல்லுருவம்; அழியா உருவம். அது வாக்கிற்கும், மனத்திற்கும் அப்பாற்பட்டது. இறைவனை 'காண்டற்கரியவன்' என்று ஆழ்வார் பல இடங்களில் அருளியுள்ளார். நம்மாழ்வார்,

"பல்லுருவை எல்லாம் படர்வித்த
வித்தகா! உன்
தொல்லுருவை யாரறிவார் சொல்லு"

என்று வினவுகிறார். வாக்கு கடந்த முழுமுதற் பொருளை, வாக்கு மனமுடையார் எப்படி வழிபடுவது? நம்மாழ்வார் பாசுரங்களைக் கொண்டே விடையறிவோம்.

புலவர். பொன். சுப்பிரமணியன் எம்.ஏ.,
*திருக்கண்ணபுரம்.*

எங்கும் கலந்து இருப்பவன் இறைவன். ஆதலின் இயற்கையை இறைவடிவாகவும், இறையாகவும் போற்றுதல் ஆன்றோர் வழக்கு. நம்மாழ்வார் பாசுரங்களை நோக்குமிடத்து மலர், ஞாயிறு, திங்கள், மலை முதலியவைகளை மட்டும் பாடினாரில்லை. அப்பொருட்களினூடே கலந்த ஓர் அகண்டாகாரப் பேரறிவைத் தம் அகக் கண்ணால் கண்டு பாடினார். ஆழ்வார் கொண்ட பூவும், ஞாயிறும், திங்களும் பிறவும் ஆண்டவன் வடிவங்களாம்.

'' பூவையும் காயாவும் நீலமும் பூக்கின்ற
காவிமலரென்றும் காண்டொறும்—
பாவியேன்
மெல்லாவி மெய்மிகவே பூரிக்கும்
அவ்வவை
எல்லாம் பிரானுருவே என்று''

இப்பாசுரத்தால், எல்லாம் கடவுள் மயம் என்பது தெளிவாகின்றது. தொடக்கத்தில் உருவம், இயற்கை இறையை நினைவூட்டும் அறிவாகக் கொள்ளப்பட்டது. வழிபாடு உயிருக்கு உறுதி பயப்பது. மனமொழி மெய்களால் இடையறாது ஆண்டவனை வழிபட அன்பு நிகழும். ஆழ்வார், வழிபாட்டால் இறையன்பில் தோய்ந்து பேறு பெற்றார். அவருடைய பாசுரங்களில் பல இடங்களிலும் இவ்வுண்மை விளங்கும்.

நம்மாழ்வார் ஒரு சமரச ஞானியாவார். இறை ஒன்றே. அவ்வொன்றற்குப் பலமொழியில் பலப் பல பெயர்கள் வழங்கப் பெறுகின்றன. 'நமது நெறியைப் போன்ற பிற நெறிகளும் இருக்கின்றன' என எண்ணுதல் சிறப்பு. ஆழ்வார் அருளிய சமரசக் கருத்துடைய கீழ்காணும் செய்யுளைக் காணலாம்.

வணங்கும் துறைகள் பலபல
வாக்கி மதிவிகற்பால்
பிணங்கும் சமயம் பலபல
வாக்கி அவை யவைதோ
றணங்கும் பலபல வாக்கி
நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்
இணங்கும் நின்னோரை யில்லாய்
நின்கண் வேட்கை எழுவிப்பனே!

விஷ்ணு, சிவன் என்னும் சொற்களைப் பிடித்து அலைத்துப் பொருள் விடுத்துப் பூசல் செய்யும் குழுவினர், நம்மாழ்வார் அருளிய தமிழ் வேதத்தை முற்றும் ஓதி உணர்ந்து அதன் பொருண்மை கண்டால், தம் பூசலை விடுவர்.

'' யானும் தானா மொழிந்தானை யாதும்
யாவர்க்கும் முன்னோனைத்
தானும் சிவனும் பிரமனும் ஆகிப்
பணைத்த
தனிமுதலை''

என்று கூறும் போதும் ஏகம், அவன் ஒருவன் என்று கூறியிருப்பதிலிருந்து ஆழ்வாரின் சமரச நோக்கை உணரலாம்.

நம்மாழ்வார் தமிழைக் குறிப்பிடும்போது 'என்னால் தன்னை, இன் தமிழ் பாடிய ஈசனை' என்று சிறப்பிக்கின்றார். அகத்துறைப் பாடல்களைப் பாடும் போது ஆழ்வார் பெண்மைக்குக் கொடுத்துள்ள தனிச் சிறப்பை உணரலாம்.

இறையவன் தன் உண்மை அடியார்க்கு எளியவன்; பிறர்க்கு அரியவன். இவ்வுண்மையைக் கூறும் நம்மாழ்வார், கண்ணனின் திறத்தைப் பாசுரத்தில் இணைத்துப் பாடும் அழகும், இனிமையும் சிந்திக்கத்தக்கது. குழந்தை கண்ணனின் ஓடி விளையாடும் பருவம். யசோதைக்குத் தெரியாமல் வெண்ணெயை உண்டு விடுகிறான். குறும்பு செய்த தன் மகனை யசோதை உரலுடன் கட்டிப் போடுகிறாள். உலகத்திற்கு உதவும் உத்தமன் உரலுடன் இணைந்து இருந்து ஏங்கிய எளிய நிலைமையைப் பாடினார். பாசுரத்தை பாடி முடித்ததும், கண்ணனின் நிலையை சிந்தித்து அதில் ஆழ்ந்து ஆறுமாத காலம் வாய் திறவாது இறையன்பில் திளைத்தார். அப்பாசுரம் வருமாறு;

'' பத்துடை அடியவர்க் கெளியவன்
பிறர்களுக்கரிய
வித்தகன்; மலர்மகள் விரும்பும்
நமரும் பெறலடிகள்
மத்துறு கடைவெண்ணெய் களவினில்
உரவிடையாப்புண்டு
எத்திறம் உரலினோடு இணைந்து
இருந்து ஏங்கிய எளிவே',

தம் வாழ்க்கையில் ஏற்படும் சில சிக்கலான நிலையில் திருவாய் மொழி நூலில் கயிறு சார்த்திப் பார்ப்பது சில பக்தர்களின் வழக்கம். ஆழ்வார் திருநகர் கோயிலில் திருப்புளி தல மரமாகும். நம்மாழ்வார் அமர்ந்திருந்த பாகமாகிய மரத்தில் தினமும் திருமஞ்சனம் வழிபாடு நடந்து வருகின்றது. ஒரே மரமாக இருந்த போதிலும் தனித்தனியாக ஏழு பாகங்களாகப் பிரிந்து மண்டபத்தின் மீது சாய்ந்து பார்ப்பதற்கு அழகாகத் தோன்றுகிறது. இம்மரத்தின் காய்ந்த கொப்புகள் தீயில் பட்டால் இரத்தம் முதலிய துர்நீர் மரத்திலிருந்து வெளிப்படுவதாக ஆழ்வார் திருநகரி ஆதிநாதர் கோயில் வரலாற்று நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. இம்மரத்தின் காய்கள் காய்ந்த போதிலும் பழுக்காமல் பிஞ்சிலே உதிர்ந்து விடுகின்றன.

இத்தலத்தைச் சுற்றியுள்ள மரங்களிலும் காய்கள் பழுப்பதில்லை. திருப்புளியைச் சுற்றியுள்ள பீடத்தில் (மதிற்சுவர்) 108 திருப்பதி எம்பெருமானகளும், கீழ்வரிசையில் ஆச்சாரியார்களும், அதன் கீழ்வரிசையில் யானை உருவங்களும் அழகாய் அமைக்கப் பெற்றிருக்கின்றன. நம்மாழ்வார் இளமையில் அமர்ந்தது திருப்புளியின்கீழ் என்பதை நினைவு கூர்ந்து, அதனை மதிக்கும் பொருட்டுத்தான் வைணவத் திருக்கோயில்களில் புளியமுது சிறப்பாகத் தயாரித்து அன்பர்கட்கு வழங்கும் பழக்கம் நிலவி வருகிறது என்று எண்ண இடமுண்டு.

தமிழ்நாடு பெற்ற தலை சிறந்த ஞானிகளுள் நம்மாழ்வார் ஒருவர் என்பதும், அவர் சமரச நோக்கமுடைய பெரியார் என்பதும் இதனால் அறியலாகும். அவர் கூறிய உண்மைகளை உணர்ந்து கடைப்பிடித்து நடத்தல் மக்களின் இன்றியமையாத கடமை என்பதும் உணரவேண்டும்.



# கீதை காட்டும் நல்வழி

மோக்ஷ ஸன்யாஸ யோகம்

அத்தியாயம் — 18

பகுதி — 11

ஸாத்விக அறிவு எத்தகையது என்பதன் விளக்கம் இந்த சுலோகத்தில் தரப்படுகிறது.

ப்ரவிருத்திம் ச நிவ்ருத்திம் ச
கார்யாகார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி
புத்தி: ஸா பார்த்த ஸாத்விகீ ||
(18-30)

"பார்த்தா, பிரவிருத்தியையும், நிவிருத்தியையும், செய்யத் தகுந்ததையும், தகாததையும், பயத்தையும் பயமின்மையையும், பந்தத்தையும், மோட்சத்தையும் அறியும் புத்தி ஸாத்விகமானது".

குழந்தை தனக்குத் தெரியாததைத் தன் தாயிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறது. மாணவன் தனக்குத் தெரியாததைத் தன் ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்து கொள்கிறான். அதுபோல நமக்குத் தெரியாததை நாம் தெரிந்தவர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். எல்லாம் அறிந்த பகவான் இங்கே ஸாத்விக அறிவு எத்தகையது என்பதை விளக்குகின்றார்.

உலகத்துடன் நம்மை பந்தப்படுத்தும் கர்மம் ப்ரவிருத்தி என்றும், உலக பந்தங்களிலிருந்து விடுவிக்கும் கர்மம் நிவிருத்தி என்றும் பகரப்படுகிறது. ஆசைகள் பெருகப் பெருக நமது பந்தங்களும் கூடுகின்றன. அவை குறையக்குறைய பந்தங்களும் குறைகின்றன. ஆசையற்ற நிலையே ஆனந்த நிலை. அதுவே முக்தி நிலை. எந்தக் காரியங்கள் நம்மைப் பந்தப் படுத்தும், எவை நம்மைப் பந்தப் படுத்தா என்பது உயர் அறிவால் மட்டுமே பெறக் கூடியது ஒன்றாகும். பொதுவாக நம்மவரது வாழ்வு செக்கு மாடு போலவே அமைகிறது. 'புனரபி ஜனனம், புனரபி மரணம், புனரபி ஜனனீ ஜடரே சயனம்' என்ற ஆதிசங்கரரின் வாக்குக் கேற்ப திரும்பத் திரும்ப நாம் நம்மை மென்மேலும் இந்த சம்சார பந்தத்தில் ஆழ்த்தும் செயல்களையே செய்து வருகிறோம். நல்லறிவு நமக்கு நிவிருத்தி மார்க்கத்தை உணர்த்துகிறது. மோட்சத்துக்கு ஏதுவான கர்மத்தை அகர்மம் என்றும் சன்யாசம் என்றும் கூறலாம். ஸன்யாசம் என்பதன் பொருள் காம்ய கர்மங்களை விட்டுவிட்டுப் பற்றற்ற முறையில் லோக க்ஷேமத்திற்காக இடைவிடாது கடமைகளைச் செவ்வனே ஆற்றுவதாகும். 'ஸன்யாசம்' என்பது காவி உடை தரித்து உலகை விட்டு ஓடிச் சென்று இமய மலைக் குகைகளில் தனியே தவம் புரிவதல்ல. எது செய்யத் தகுந்தது? எது நமக்கும் பிறருக்கும் மன அமைதியைத் தருமோ, எதனால் சச்சரவுகள் குறைந்து சமாதானம் ஓங்குமோ, அது செய்யத் தகுந்தது ஆகும். எதனால் நம்முடையவும் பிறருடையவும் மனஅமைதியும் மகிழ்ச்சியும் குலையுமோ அது செய்யத் தகாதது ஆகும்.

"அச்சமே கீழ்களது ஆசாரம்", 'அஞ்சி அஞ்சிச் சாவார் இவர் அஞ்சாத நேரமில்லை', என்ற சொற்றொடர்கள் சான்றோன் எதற்கும் அஞ்ச மாட்டான் என்பதை மறைமுகமாக விளக்குகின்றன. 'அபயம்' என்பது ஒரு தெய்வீகப் பண்பாகும். தகாததைச் செய்வதற்கு ஒருவன் பயப்பட வேண்டும். மற வழியில் செல்ல ஒருவன் அஞ்ச வேண்டும். பொய் சொல்ல, பித்தலாட்டம் செய்ய, லஞ்சம் வாங்க ஒருவன் அஞ்ச வேண்டும். மாறாக நேர்மை உள்ளம் கொண்டவன், தன் மனசாட்சிக்கு ஒப்ப நடப்பவன் எவருக்கு பயப்படத் தேவையில்லை. 'அஞ்சுவது அஞ்சாமை பேதைமை' என்பது சான்றோர் வாக்கு. தீயதைத் தவிர்க்க வேண்டும். நல்லதை நாட வேண்டும். இவ்வாறு பயம்-பயமின்மை, பந்தம்-மோட்சம் போன்றவற்றைப் பிரித்தறிய எது உதவுகிறதோ அந்த அறிவு ஸாத்விகமானது ஆகும்.

"யயா தர்ம மதர்மம் ச
கார்யம் சாகார்ய மேவ ச ||
அயதாவத் ப்ரஜாநாதி
புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ||
(18-31)

'பார்த்தா, தர்மத்தையும் அதர்மத்தையும், எது தகுந்த காரியம், எது தகாத காரியம் என்பதையும் தாறுமாறாக எந்த புத்தி அறிகிறதோ அது ராஜஸமானது'.

பேராசிரியர் டி. கே. நாராயணன்

ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.

தர்மம் என்ற சமஸ்கிருத வார்த்தை மிகுந்த பொருள் பொதிந்தது. அதைப் பிறமொழியில் மொழி பெயர்த்தல் மிகவும் கடினம். அறம், கடமை, சட்டம் போன்ற பல வார்த்தைகளும் ஓரளவே அதன் பொருளைத் தருகின்றன. எது தர்மம், எது அதர்மம் என்பதை உள்ளபடி அறிவதற்கு தெளிந்த அறிவு தேவை. நீர் அசைகையில் அதில் எவ்வாறு பிம்பமும் சரியாகத் தெரியாதோ, அது போல ராஜஸ குணம் மேலோங்கிய

# தீட்சை

திருஷ்டி தீட்சை : பார்வையின் மூலம் உள்ளத்தில் இருக்கும் சக்தியை குருநாதர் சீடனுக்கு கொடுத்து அருள்வதாகும்.

ஸ்பரிச தீட்சை : தொட்டுத் தீட்சை வழங்குவது. குருநாதர் விரல் மூலம் தொடலாம்; அல்லது ஒரு பழத்தைக் கொடுத்தோ, அட்சதையைப் போட்டோ ஆசி வழங்கலாம். எவ்வகையானாலும் தொடுவது தொடரும்போது அது ஸ்பரிச தீட்சையாகிறது. சித்தர்கள் பொதுவாக இப்படித்தான் தீட்சை அளிப்பது வழக்கம்.

கிருபா தீட்சை : சிந்தனையாலே சீடனுக்குத் தீட்சையை அருள்வது.

சப்த தீட்சை : ஏதாவது ஒரு மந்திரத்தைச் சீடனின் காதில் ஓதி அதன் மூலம் தீட்சை அளிப்பது இந்த முறை.

மெய்ஞானிகளாகிய குருநாதர்கள் இதில் எந்த முறையையும் உபயோகிக்கலாம். ஷீர்டி ஸாயிபாபா திருஷ்டி தீட்சை கொடுத்ததாகச் சொல்லுவார்கள். பகவான் ராமகிருஷ்ணர் ஸ்பரிச தீட்சையை விவேகானந்தருக்கு அளித்தார். நான்கு தீட்சை முறைகளும் மிக உயர்ந்தவைதான். அதைப் பெற்றுக் கொண்டதன் அடையாளமாகச் சீடனுக்கு ஞானப் பார்வை வந்து விடும். அது சாதாரணப் புத்தக அறிவினால் கிடைக்காது.

திருமதி கமலா மாரியப்பன் — கோயம்புத்தூர்.

புத்தியில் எது அறம் எது மறம் என்ற வித்தியாசம் சரிவரத் தெரியாது. தர்மத்தை அதர்மமாகவும், அதர்மத்தை தர்மமாகவும் தாறு மாருக அது பொருள் படுத்தும். சூதாடுதல் அரச தர்மம் என்று யுதிஷ்டிரரை ஒப்புக் கொள்ள வைத்து துரியோதனன் அவரைச் சூதாட வைத்து தன் மாமன் சகுனியின் துணையுடன் அவரைத் தோற்கடித்துக் காட்டுக்கும் ஓட்டினன். கூட இருந்த பெரியோர்கள் அனைவரும் அவன் செய்தது அதர்மம் என்று எடுத்துக் கூறியும் அவன் அவன் அதை முட்டாள் தனமாக தர்மம் என்று எண்ணினன். விளைவு? அழிந்தொழிந்தான்.

ரஜோ குணம் உள்ளவர்களிடம் மிகுந்த உழைப்பு இருக்கும். பொருள் சேர்க்க அவர்கள் படாதபாடு படுவார்கள். வியாபாரத்தில் பிறருடன் கூட்டுச் சேர்ந்தால் அத்தகையவர்கள் பிறரை எப்படி ஏமாற்றுவது என்பதிலேயே நாட்டமாயிருப்பர். அதர்ம வழியில், அநியாய வழியில் அவர்கள் பொருள் சேர்க்கத் தயங்க மாட்டார்கள். பிறருக்கு அவர்கள் நன்மை செய்வது போலக் காட்டிக் கொண்டு திடீரென்று அவர்களை ஏமாற்றி விடுவார்கள். தவறையும் செய்து கொண்டு இத்தகையவர்கள் தங்களை தர்மவான்களாகப் பிறருக்குக் காட்டிக் கொள்வார்கள். தாங்கள் செய்யும் செயலுக்கு இத்தகையவர்கள் புராணங்கள் மற்றும் இதிகாசங்களிலிருந்து மேற்கோள்களையும் காட்டுவார்கள். தங்களையும் ஏமாற்றிக் கொண்டு பிறரையும் ஏமாற்றி வாழும் இவர்களை "பசுத்தோல் போர்த்த புலிகள்" என்றாலும் தகும். எதைச் செய்தாலும் குறுக்கு வழியும், பொய்யும் பித்தலாட்டமுமே அவர்களுக்குப் பிடிக்கும். அறவழியில் செல்பவர்களை இவர்கள் 'ஏமாளிகள்' என்று கேலி செய்வர். பிழைக்கத் தெரியாதவர்கள் என்ற பட்டத்தையும் அவர்களுக்குச் சூட்டுவார்கள். இத்தகைய போலிகளிடமிருந்து சாதகர்கள் தொலை தூரம் விலகிப் போய்விட வேண்டும். அவர்களைப் பார்ப்பதுவும் தீது. அவர்கள் சொல் கேட்பதுவும் தீது.

அதர்மம் தர்மமிதி
யா மன்யதே தமஸாவ்ருதா |
ஸர்வார்த்தான் விபரீதான்ஸ்ச
புத்தி: ஸாபார்த்த தாமஸீ ||
(18-32)

மாலை வேளை. கருகரு என்ற இருள் கவ்விக் கொண்டிருக்கிறது. அப்பொழுது தனியே வழியே போய்க் கொண்டிருக்கும் ஒருவன் தூரத்தில் பாம்பு ஒன்று சுருண்டு கிடப்பதைக் கண்டு திடுக்கிட்டு நின்று விடுகிறுன். உடல் படபடக்கிறது. மெய் வியர்க்கிறது. கண் மங்குகிறது. அப்படியே வியந்து நின்று விடுகிறுன். சிறிது நேரம் அப்படியே நின்றவன் அந்தச் சுருண்ட பாம்பு சிறிதும் அசையாது இருப்பதைக் கண்டு ஐயம் கொள்கிறுன். ஒரு வேளை இது பாம்பு இல்லையோ, வெறுங்கயிருக இருக்கலாமோ என்ற எண்ணம் எழுகிறது. உடனே தைரியத்தை வரவழைத்துக் கொண்டு அடிஅடியாக முன்னேறுகிறுன். அந்தப் 'பாம்பு' அப்பொழுதும் நகரவேயில்லை. அருகில் சென்று பார்க்கிறுன். 'பூ! வெறும் கயிறு தானு!' என்று அதைக் காலால் உதைக்கிறுன். கயிற்றைப் பாம்பாகக் கருத வைத்தது அவனிடம் நிலவிய மயக்கமேயாகும். இதுவே தாமஸிக புத்தியின் இயல்பாகும். சரியைத் தவருகவும் தவற்றைச் சரியாகவும், உண்மையைப் பொய்யாகவும், பொய்யை உண்மையாகவும், துன்பத்தை இன்பமாகவும், இன்பத்தைத் துன்பமாகவும் இது நம்மைக் கருத வைக்கிறது. விவேக புத்தி அகன்று விடுகிறது. அதாவது பகுத்தறியும் பான்மை நம்மிடமிருந்து அகன்று விடுகிறது. எலும்பைக் கடிப்பதால் தன் பல்லிலிருந்து கசியும் ரத்தத்தை எலும்பிலிருந்து வருவதாகக் கருதி எலும்பை இன்னும் பலமாகக் கடிக்க முற்படும் நாயின் நிலையில் இத்தகைய மனிதன் உள்ளான்.

இனி திருதியின் மூவிதத் தன்மை விளக்கப்படுகிறது. (தொடரும்)

# விநாயகர்

விநாயகர் என்ற சொல்லுக்குத் தமக்குத் தலைவர் இல்லாதவர், ஒப்புயர்வற்றவர் என்பது பொருளாம். சிறந்த நாயகர், தலைவர், நடத்துவோர் என்பதும் பொருளாம்.

யானை முகம், ஒடிந்த கொம்பு, பருத்த தொந்தி, இடது கையில் மோதகம், மூஷிக வாகனம் இவற்றுடன் இருந்த கோலத்தில் விளங்குவதே இத்திருவுருவத்தின் அமைப்பாகும்.

எல்லாம்வல்ல பரம்பொருளாகிய கடவுளிடமிருந்து முதலாவது உண்டாகிய படைப்பு "ஓம்" என்னும் பிரணவ நாதமேயாகும். அந்த 'ஓம்' என்னும் ஒலியின் வரிவடிவமே விநாயகரின் திருவுருவமாம். இறைவனிடமிருந்து முதற்கண் தோன்றியது ஓங்காரப் பிரணவமேயாகையால் இவர் "பிரணவ கணபதி" யென்றும், "ஓங்கார உருவன்" என்றும் பரமசிவனது மூத்த பிள்ளை என்றும் அழைக்கப்படுகிறார்.

திருமதி. கமலா மாரியப்பன்

கோயம்புத்தூர்.



ஸ்ரீ கணபதி - ஹளேபேடு (ஹோய்சாளர் காலத்தியது).

ஒடிந்த கொம்பு "ஓ" என்ற எழுத்தில் சுழி இருக்குமிடம். இங்கிருந்து தொடங்கி வலக்கை வழியாகக் கிரீடத்தைச் சுற்றி, இடக்கைப் பாகம் வரையில் வந்து, திரும்பி வளைந்து, நெற்றிப் பொட்டு வரையிற்போய்த் துதிக்கை வழியாகக் கீழிடக்கை வந்து கால் வரை இறங்கும்.

இடக்கையும் மோதகமும் 'ம்' என்பதைக் குறிக்கின்றன. ஆகையால் விநாயகர் திருவுருவம் ஓங்கார வடிவமேயாகும்.

யானையின் குரலொலி உலகில் உண்டாகும் எல்லா ஒலிகளைக் காட்டிலும் ஓங்காரப் பிரணவ ஒலியை நன்கு ஒலிப்பதால் யானை முகம் இவருக்கு அமைக்கப்பட்டது.

பிரணவ ஒலி எல்லாவற்றிற்கும் முதலாவதாக விளங்குவது. ஆகையால் விநாயகரும் முதலாவதாக வைத்துப் பூஜிக்கப்படுகிறார்.

ஓங்காரத்துக்குள் எல்லா அண்டங்களும் அடங்கிக் கிடக்கின்றன என்பதை அவரது பெரிய வயிறு காட்டுகிறது.

அழிவற்ற தன்மை, பேரின்பம் முதலிய மங்கல குணங்கள் அவரிடம் குடிகொண்டிருக்கின்றன என்பதை மோதகம் அல்லது அமிர்தகலசம் காட்டுகின்றது.

விநாயகர் ஓங்காரப் பிரணவஸ்ரூபி என்றபோது அது மகா பெரிய அண்டங்களையும் தனதுட்கொண்ட பிரம்மாண்ட வடிவமென நமக்குப் படுகிறது. அவருக்கு வாஹனம் மூஞ்சூறு என்றபோது, மூஞ்சூறு தாங்கத்தக்க சிற்றுருவினர் என்பதும் தெரிகிறது.

ஆதலால் கடவுள் அணுவுக்கணுவாயும், மகத்துக்கு மகத்தாயும் இருக்கிறார் என்பதை உணர்த்த மூஞ்சூறு வாகனமாயிற்று.

ஆகவே கடவுளிடமிருந்து முதலாவது உண்டாகிய ஓங்காரப் பிரணவ ஒலியின் உருவமே விநாயகர் திருவுருவம் ஆகும்.



# பொல்லாப் பிள்ளையார்

திருநாரையூர் என்ற பெயரை அறியாதார் இருக்க முடியாது. இவ்வூர் சோழர்கள் காலத்தில் தனிச் சிறப்புடன் விளங்கியது.

இந்த ஊர் திரு+நாரை+ஊர் என்று அழைக்கப்பட்டது. ஏன் தெரியுமா? நாரையொன்று நாள்தோறும் தவறாது தெய்வ வழிபாடு செய்து வந்ததாம். அத்துடனா? முடிவில் அது முக்தியும் பெற்றதாக இங்குக் கூறுகிறார்கள். எனவேதான் இவ்வூர் திருநாரையூர் என்று பெயர் பெற்றதாம்.

அமைவிடம் :

திருநாரையூர் தில்லைக்கு அருகே உள்ளது. இங்கே உள்ளன ஒரு கோவிலும், குளமும். இங்குதான் தேவாரத்திற்குப் பண் அமைத்த நம்பியாண்டார் நம்பி வாழ்ந்தார். இவ்வூருக்கு மற்றொரு சிறப்பும் உண்டு. அது என்ன தெரியுமா? அங்குள்ள பிள்ளையார் கோவிலே அதற்குக் காரணம். இந்தப் பிள்ளையாரை "பொல்லாப் பிள்ளையார்" என்று அழைக்கிறார்கள். இந்த முக்கண்ணன், இதே பெயருடன் திருவெண்ணெய் நல்லூர், அம்பல்-சுட்டு ஆகிய ஊர்களிலும் விளங்குகிறார் என்றாலும் இங்கு வீற்றிருக்கும் வேழவேந்தன் தனிச் சிறப்பு வாய்ந்தவர். தன்னை நாடி வந்தோரை, முதலில் சோதித்தாலும் பின்னர் மனமிரங்கி, அவர் தம் வேண்டுகோளை நிறைவேற்றுபவன்; வேதனைகளைத் தீர்ப்பவன்; கண்ணீரைத் துடைப்பவன்; வேண்டியதை வேண்டியபடியே கொடுப்பவன். இத்துணை நன்மைகளையும் செய்யும் யானை முகத்தானை 'பொல்லாப் பிள்ளையார்' என அழைப்பது சரியா?

பொல்லாப் பிள்ளையார் விளக்கம் :

தன்னை நம்பாதவரை ஆட்டிப் படைத்து, பின்னர் அவர்களுடைய ஞானக் கண்களைத் திறப்பதாலா? இப்படி நம்பிக்கையற்றவரின் கண்களுக்கு புலனாகாது 'பொல்லாத் தனம்' செய்ததாலா? ஒரு வேளை, பொல்லாதவர்க்குப் பொல்லாதவனாக இருந்து, அவர்களுடைய பொல்லாத்தனத்தைப் போக்குவதால் இருக்குமா? இன்றேல், பொல்லாத வினைகள் ஏதும் தன்னை நினைப்பவரை அண்டாத வண்ணம் காப்பதுடன், பொல்லாங்கு வராது தடுப்பதால் அப்பெயர் ஏற்பட்டிருக்குமா? என ஆராயும்போது, கடைசியாகக் கூறிய காரணமே 'சரி'யென பகுத்தறிவு விடை பகரும்.

இனி ஊருக்குள் போவோமா?

தனிக் கோவிலில் கம்பீரமாக வீற்றிருக்கிறார் கணபதி. இவன் ஏக தந்தம் உடையவன். பூத கணங்களுக்கு அதிபதி. சரிந்த பெரிய வயிறு இதைக் காட்டுகிறது போலும்! 'ஓ'ங்கார சொரூபம் பெற்றவன். இதற்குச் சான்று அவனது யானை முகமே. மனிதனின் சாதனைகளுக்கும் (சித்தி) அதைப் பெறுவதற்கான புத்தி கூர்மையும் ஒருங்கே பெற்றவன். இவனது ஐங்கரங்களும் பஞ்சமா பூதங்கள் பக்தர்களைச் சென்று தொல்லைத் தராவண்ணம் காப்பவை; பஞ்ச மா பாதகங்களை விரட்டியடிப்பவை. ஆக இவனது பஞ்ச கரங்கள், எந்த நொடியிலும் நாடியவர்களைக் காக்கும் இயல்பு உடையன என சுட்டிக் காட்டுகின்றனவோ! நிலையான பேரின்பத்தின் முதல்வன் தான் என்பதை அவன் அமர்ந்திருக்கும் முறையே காட்டுமன்றோ?

"நிவேதனத்தை நீ உண்டே தீர வேண்டும்"!

இந்த விநாயகன் முன் கண்களில் நீர் சோர நின்றிருந்தான் ஒரு சிறுவன். அவன் அக்கோயிலின் அர்ச்சகர் மகன். தந்தை வெளியூர் சென்றிருந்ததால், மகனைப் பூசை செய்யும்படி சொல்லியிருந்தார். மகனும் அப்படியே தன் மனதினை ஒருமுனைப்படுத்தித் தும்பிக்கை ஆழ்வாரைத் துதித்தான்; வழிபாடுகளையும் ஒருவனே செய்து முடித்து விட்டான். கணபதிக்கு நிவேதனமும் செய்தான். தான் அர்ப்பணம் செய்யும் நிவேதனத்தை கணநாதன்

---

வி. ஜலஜா சக்திதாசன் M.A., M.F.D.,
சென்னை-28.

---

உண்ண வேண்டும் என மனதார விரும்பினான் சிறுவன். கஜானனன் வந்தானா? இல்லையே!

தான் ஏதோ தவறு செய்துவிட்டதால்தான் விக்னராஜன் வரவில்லை என எண்ணினான் சிறுவன்; மீண்டும் மீண்டும் துதித்தான்; கதறினான்; துடித்தான்.

"நீ வந்து, இந்த நிவேதனத்தை உண்டே தீர வேண்டும்! இல்லை என்றால் இதோ பார்; இந்தக் கல்லில் என் தலையை மோதிக் கொள்கிறேன்!" என்றான் கடைசியாக. சொன்னதோடு நிற்கவில்லை. செயலிலும், ஈடுபட யத்தனித்தான் அவ்வளவே!

இனியும் கருணைமூர்த்தி கல்லாய் இருப்பானா? ஓடி வந்தான். சிறுவன் தலைக்கும் கல்லுக்குமிடையே கையை வைத்தான். சிறுவனுக்கு அடிபடாமல் தடுத்தான். சிறுவனைச்

சமாதானப்படுத்தினான். அவன் வைத்த நிவேதனத்தையும் உண்டான வேழ முதல்வன். சிறுவன் ஆனந்தக் கூத்தாடினான்.

சிறுவனின் தந்தை வந்தார். சிறுவனின் கூற்றை நம்ப மறுத்தார். அத்துடனா? சிறுவன் கல்வி பயல செல்லவில்லை என கடிந்து கொண்டார். ஓடினான் சிறுவன். எங்கே? விநாயகர் ஆலயத்திற்கு. வேக வேகமாக ஓடி வந்தான் நம்பியாண்டார் நம்பி என்ற அச்சிறுவன் முக்கண்ணனிடம்.

எனக்கு நீதான் படிப்பு சொல்லித் தர வேண்டும். தந்தை பள்ளிக்குச் செல்லச் சொல்கிறார். 'நான் அங்கே போக மாட்டேன். நான் உன்னிடம்தான் பாடம் கற்றுக் கொள்வேன். நீ தான் எனக்கு ஆசானாக வேண்டும்!' என உருக்கமாக வேண்டினான்.

**ஆசானும் ஆனான் பொல்லாப் பிள்ளையார் :**

சிறுவனின் உருக்கமான குரல் கேட்டான் வேழமுகத்தான். இப்போதும் வந்தான். இம்முறை நிவேதனத்தை உண்ண மட்டுமல்ல; சிறுவனுக்கு அறிவு புகட்டும் ஆசானாகவும் வந்தான்.

**அவைகளையும் உண்டான் :**

நிவேதனத்தை நேரில் வந்து கணபதி உண்ணும் விவரம் சோழ பேரரசன் இராசராசன் காதிற்கு எட்டியது. மன்னன் இதை நேரிற் காண விரும்பினான். ஏராளமான தேங்காய்கள், பழங்கள் முதலியவற்றைக் கொண்டு வந்து வேதநாயகன் முன் வைத்தான். நம்பியாண்டாரை ஈசன் மகனை இவைகளை ஏற்று, உண்ணச் செய்யும்படி வேண்டினான் நில மன்னன்.

நம்பியாணடார் எம்பெருமானை துதித்தார்; வழிபாடுகளைச் செய்தார். வைத்த நிவேதன பொருள் அனைத்தையும் ஏற்று உண்ண வேண்டும் எனவும் தன் ஆசானை வேண்டினார். நிவேதன பொருள்களனைத்தையும் ஈசன் மைந்தன் உண்டு முடித்ததைக் கண்டான் நிலமன்னன். நம்பியின் பெருமையை முற்றிலும் உணர்ந்துகொண்டான் சோழன். நம்பியிடம் மற்றொரு வேண்டுகோளையும் விடுத்தான்.

**தேவாரத் திருமுறை :**

தேவாரத் திருமுறைகள் எங்கோ காணமல் போயிருந்தன. சோழ மன்னன் தமிழ்பால் பேரன்பு கொண்டவன். திருமுறைகளை எவ்வாறேனும் தேடி, தொகுத்து விட வேண்டுமென பேரார்வம் கொண்டான். எவ்வளவோ முயன்றும் எந்த பயனும் கிட்டவில்லை. மனச் சோர்வுற்ற இராசராசன் நம்பியாண்டார் நம்பியை இப்பெரும் தமிழ்த் தொண்டைச் செய்யும்படி மனமுருகி வேண்டினான்.

**தேடியும் தந்தான் கருணைக் கடல் :**

விநாயகனை வேண்டினார் நம்பி. தில்லைக்கு அழைத்துச் சென்றான் முக்கண்ணன். பொன்னம்பலத்தின் அருகே ஒரு பாம்பு புற்றைக் காட்டினான். பெரிய புற்று. அச்சம் தரக் கூடியதாக இருந்தது. அதனை இறைவனின் கட்டளைப்படி லேசாகக் கலைத்தார் நம்பியாண்டார். புற்றின் உள்ளே கையையும் விட்டு விட்டார்! அங்கே?

**திருத்தொண்டர் திருவந்தாதி :**

கைக்குத் தட்டுப்பட்டன ஓலைச் சுவடிகள். ஒவ்வொன்றாக வெளியே எடுத்தார் நம்பியாண்டார். சுத்தமும் செய்தார். இவைகளினின்று அறுபத்திமூன்று நாயன்மார்களின் வரலாறுகளைத் தொகுத்தார்!

இம் மாபெரும் பணியை செவ்வனே செய்ய மூலாதாரமாக இருந்தவன் யார்? பொல்லாப் பிள்ளையாரே யன்றோ? அவர் தம் புகழ் பாட ஒரு நாவு போதுமா? அல்லது முடியுமா? அவர் தம் கோவிலைக் காணாத கண்களும் கண்களோ! ★

# கண்ணன் சிரிக்கின்றான்

கவிஞர் எம். வி. குமார் — மதுராந்தகம்.

காலைநேரக் கதிரவனொளியில் கண்ணன் சிரிக்கின்றான் — நீல
கடலலைமேலே கனிவுடன்நின்று களிநடம் புரிகின்றான்
—கா—

மாலைமயங்கும் வேளையிலேஅவன் மனதினில் வருகின்றான்
மனதினில்நின்று மகிழ்வுடனேநல்ல மகிழ்ச்சியைத் தருகின்றான்
—கா—

வேய்ங்குழல்தன்னைக் கைகளில்கொண்டு வேடிக்கைச் செய்கின்றான்
வேதனைநீங்க குழலதைக்கொண்டு கானம் இசைக்கின்றான்
ஆவின்கூட்டம் அருகினில்நின்று அன்பைப் பொழிகின்றான் — அவை
அன்பாய்தந்திடும் அமுதம்உண்டு அகமே மகிழ்கின்றான்
—கா—

கார்முகில்வண்ணன் கண்ணன்அழகில் கருணை பிறக்கிறது
பாரதப்போரினில் கீதைபிறந்து பாகாய் இனிக்கிறது
கண்ணன்அருளை காணும்மனமே புகழுடன் சிறக்கிறது
மன்னன்வரவால் மண்ணும்விண்ணும் மகிழ்வுடன் இருக்கிறது
—கா—

(32-ம் பக்கத் தொடர்ச்சி)

இத்தகைய இயற்கைச் சூழலின் இடையே,

"அரவு நீள்கொடியோன் அவையுள் ஆசனத்தை
அஞ்சிடாதேயிட அதற்குப்
பெரியமா மேனியண்ட மூடுருவப்
பெருந்திசை யடங்கிட நிமிர்ந்
தோன்"

எழுந்தருளியிருக்கிறார். பொய்யாசன மிட்டுத் தூதனாக வந்த கண்ண பிரானை நிலவறையில் தள்ளிக் கொல்ல முயன்றான் துரியோதனன். இந்த வரலாற்றை ஆழ்வார் குறிப்பிடுவார். இத்தலப்பதிகத்தைப் பாடுபவர்களுக்கு ஏழ்மை கிடையாது என்கிறார் ஆழ்வார்.

"கன்னங்கரு மேதிகள் பாய மெய்
துண்ணென்றிள வாளைகள் பாய்தரு
கண்ணங்குடி மாநகர்மேவிய...பெரு
மானே!"

என்று குரவை இராமானுசதாசர் இத்தலத்துப் பெருமாளைப் போற்றுவர்.

லோகாயத வாழ்வில் கிடந்து அல்லல் படுவதைவிட, இந்த லோக நாதன் திருவடியை அடைந்தால் இன்னல் இல்லை, இன்னருள் அடையலாம் என்று எண்ணுகிறார் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார். நூற்றெட்டுத் திருப்பதி அந்தாதியில் அவர் எண்ணம் எழுத்தாகப் பிறக்கிறது.

"கூறுபுகழ் தன்னடிக்கே
கூட்டுவனோ இன்னம் என்னை
வேறுபடப்பல் பிறப்பில்
வீழ்த்துமனோ? தேறுகிலேன்!
எண்ணங்குடியாய் இருந்தான்
நின்றான் கிடந்தான்
கண்ணங்குடியான் கருத்து"

என்று பாடி, "எம்பெருமான் என்னைத் தன் திருவடிகளிலே சேர்த்துக்கொள்வானோ அன்றிப் பிறவிக் கடலில் வீழ்த்திவிடுவானோ, அவனது திருவுள்ளம் அறியேன்" என்று கூறுகிறார்.



ஸ்ரீ ஆஞ்சநேயர் கோயிலும், திருக்குளமும் — சோளிங்கபுரம்.
திருமதி. கமலா மாரியப்பன்.

நாமும், இந்தக் கண்ணங்குடியானை எண்ணத்தில் வைத்தால் இருந்தும், நின்றும், கிடந்தும் காட்சியளிப்பான். மேலும், பிள்ளைப் பெருமாள் ஐயங்கார் இருந்தான், நின்றான், கிடந்தான் என்பதற்கிணங்க இங்கு பகவான் மூன்று கோலங்களில் காட்சியளிக்கிறார்.

நின்ற திருக்கோலத்தில் தாமோதரனாக, புஷ்கரணியின் தெற்குக் கரையில் வீற்றிருக்கும் பெருமாளாக, இத்தலத்துக்கு அண்மையிலுள்ள 'ஆரணதரி' என்ற சிற்றூரில் கிடந்த பெருமாளாகச் சேவை சாதிக்கிறார்.

திருவிழாக்கள் :

இக்கோயிலில் கவினுறக் காணக் கிடைப்பவர் ஸ்ரீ கருட பகவான் தான்! மற்றெங்கும் இல்லாதபடி இரு கைகளையும் கட்டிக் கொண்டு தரிசனம் தருகிறார். கைகளை ஒன்றன் பின் ஒன்றாக குறுக்கே மடக்கி வைத்த நிலையில் அமைந்த தோற்றப் பொலிவு பெற்ற இத்திருவுரு நம் நெஞ்சைவிட்டு அகலாது என்பது திண்ணம்.

இங்குச் சித்திரையில் நடைபெறும் பிரமோற்சவத்தின்போது, ஏழாம் திருநாள் அன்று 'வெள்ளை'ச் சாத்திக் கொண்டு பெருமாள் புறப்பாடு கண்டருளுவார். வெள்ளை சாத்துப்படி என்றால் விபூதி திருநீறு அணிந்து கொள்ளுதல் என்பது பொருள்!

அன்று அத்தலத்தில் உள்ள தலத்து வைணவர்கள் 'திருநீறு' அணிந்து வருவார்கள். இது சில விநாடிகள் தான் நடைபெறும். உபரிசுவரிசு என்ற மன்னனுக்காக இவ்வாறு நடத்தப் படுவதாகக் கூறுவர். அன்று பெருமாள் தியாகராஜர் அலங்காரத்தில் எழுந்தருளுவார். இத்திரு நீரணி விழாச் சிறப்பின் மூலம் சைவ வைணவ ஒற்றுமைக்கு ஓர் எடுத்துக் காட்டாகத் திகழ்கிறது இத்தலம்!

இத்தலம் இன்று சிற்றூராகக் காட்சியளித்தாலும் சோலைகளும் கழனிகளும் சூழ்ந்து கண்ணுக்குக் குளிர்ச்சியான பகுதியில் கோயில் அமைந்துள்ளதால், சேவார்த்திகள் ஒவ்வொருவரும் இக்கோடை காலத்தில் போய் பிரமோற்சவத்தைக் கண்டுகளிக்கலாம்!

இதனாலன்றோ, இத்தலத்து இனிய இயற்கைக் காட்சிகளையும், ஆங்காங்கே மலர்கள் மணம் வீசும் மாட்சியையும் கண்ட திருமங்கையாழ்வார், 'செழுமணி புரிசைத் திருக்கண்ணங்குடி'; 'சீதவொண் தென்றல் திசைதோறும் கமழும் திருக்கண்ணங் குடி'; 'நான் மாடத்திருக்கண்ணங் குடி' என்று புகழ்ந்து பாடியுள்ளார்.

# அபயம் அளிக்கும் அஷ்ட லக்ஷ்மி

சென்னை மாநகரில் பெசன்ட் நகரில் அலை கடலுக்கு மிக அருகாமையில் ஸகல ஐச்வர்யமும் அள்ளித் தரும் அஷ்ட லக்ஷ்மியின் ஆலயம் அமைந்துள்ளது. இவ்வாலயத்தை அமைக்கும் அருட் பணியை முக்கூர் ஸ்ரீநிவாச வரதாச்சாரியார் மேற்கொண்டது, காஞ்சி மாமுனிவரின் அருள் ஆசியினுல்தான் என்று கூறுகிறுர்கள். இங்குள்ள எம்பெருமானை மஹாவிஷ்ணு மஹாலக்ஷ்மியுடன் மட்டுமின்றி அஷ்டலக்ஷ்மிகளுடன் எழுந்தருளியுள்ள அபூர்வ ஆலயம் இந்தியாவில் இங்கு மட்டுமே உள்ளது என்று இவ்வாலயத்தில் இறை பணியில் ஈடுபட்டுள்ள அர்ச்சகர் தெரிவித்தார்.

திரு. உ. வெங்கடேசன்,
வைத்தீஸ்வரன் கோயில்.

**ஆதிலக்ஷ்மி :**

**ஸுமதஸ அந்தித ஸுந்தரி மாதவி**
**சந்த்ர ஸஹோதரி ஹேமமயே**
**முநிகண மண்டித மோக்ஷ ப்ரதாயிநி**
**மஞ்ஜுள பாஷிணி வேதநுதே**
**பங்கஜ வாஸிநி தேவஸுபூஜித ஸத்**
**குண வர்ஷிணி சரந்தியுதே**
**ஜயஜயஹே மதுஸூதந காமிநி**
**ஆதிலக்ஷ்மி ஸதா பாலாய மாம்.**

திருப்பாற்கடலை தேவர்களும், அசுரர்களும் அமுதம் பெற வேண்டி கடைந்தபோது, முதலில் விஷம் வந்தது. அதை பரமசிவன் உண்டார். பிறகு காமதேனு, சந்திரன், லக்ஷ்மி முதலியர்கள் தோன்றினுர்கள். அந்த லக்ஷ்மியே ஆதிலக்ஷ்மி என்கின்றனர். இவ்வாலயத்தில் உள்ள ஆதிலக்ஷ்மி அபய ஹஸ்தம், வரத ஹஸ்தம் என்ற இரு கரங்களுடன் காட்சியளிக்கிறுள். தெற்கு திசை நோக்கிய வண்ணம் காட்சியளிக்கிறுள். எமன் திசை தெற்கு திசையாதலால் தென்புறம் நோக்கி நின்று தொழும் அன்பர்களை எமனிடமிருந்து காப்பாற்றி ஆரோக்கியத்தை அருள்பவளும் இந்த ஆதி லக்ஷ்மிதான் என்று அர்ச்சகர் விளக்கிக் கூறினுர். அவள் பாதத்திற்குக் கீழ் பூர்ண கும்பம், கண்ணுடி, சாமரம், துஜம், ரிஷபம், பேரிகை, விளக்கு, ஸ்வஸ்திக் போன்ற மங்கலப் பொருட்களுடன் சேவை சாதிக்கிறுள்.

**தான்ய லக்ஷ்மி :**

**அயிசகலி கல்மஷ நாசினி காமிநி**
**வைதிக ரூபிணி வேதமயே**
**க்ஷீர ஸமுத்பவ மங்கள ரூபிணி மந்த்ர**
**நிவாஸிநி மந்த்ரநுதே**
**மங்கள தாயிதி அம்புஜ வாஸிநி தேவ**
**கணுச்ரித பாதயுதே**
**ஜயஜய ஹே மது ஸூதந காமிநி**
**தான்ய லக்ஷ்மி ஸதா பாலய மாம்.**

ஸகல விதமான தான்யங்களையும் விளைவித்து மக்களின் பசிப்பிணியை நீக்கும் சக்தி படைத்தவள் தான்ய லக்ஷ்மி. அஷ்டலக்ஷ்மி ஆலயத்தில் மேற்கு நோக்கி வீற்றிருக்கிறுள் தான்ய லக்ஷ்மி. ஆறு திருக்கரங்களுடன் சேவை சாதிக்கிறுள். வலது கரத்தில் அபய ஹஸ்தம், தான்யம், அம்பு; இடது கரத்தில் வில், கரும்பு, வரத ஹஸ்தம்.

**தைர்ய லக்ஷ்மி :**

**ஜயவர வர்ணிநி! வைஷ்ணவி! பார்கவி!**
**மந்த்ர ஸ்வரூபிணி மந்த்ரமயே**
**ஸுரகண பூஜித சீக்ர பலப்ரத ஜ்ஞான**
**விகாஸிநி சாஸ்த்ரநுதே**
**பவபய ஹாரிணி பாபவிமோசநி ஸாது**
**ஜநாச்ரித பாதயுதே**
**ஜயஜயஹே மதுஸூதந காமிநி தைர்ய**
**லக்ஷ்மி ஸதா பாலய மாம்.**

ஒரு மனிதனுக்கு எவ்வளவுதான் கல்விச் செல்வமும், பொருட் செல்வமும் இருந்தாலும், தைர்யம் இல்லாவிட்டால் எந்தப் பயனும் இல்லை. மனிதனுக்குத் தன்நம்பிக்கையையும், தைர்ய உணர்வையும் அளிப்பவள் தைர்யலக்ஷ்மி. அஷ்டலக்ஷ்மி ஆலயத்திற்கு அருள் பெற வரும் பக்தர்களை வரவேற்பதுபோல் வடக்கு திசை நோக்கி சன்னதி கொண்டு, அருள் புரிகிறுள் தைர்ய லக்ஷ்மி. எட்டுத் திருக்கரங்களுடன் எழுந்தருளியிருக்கிறுள் தைர்ய லக்ஷ்மி. சங்கு, சக்கரம், வில், அம்பு, சூலம், வாத்யம், அபய ஹஸ்தம், வரத ஹஸ்தம் முதலியவற்றை ஏந்தி அருள் பாலிக்கிறுள்.

**கெஜ லக்ஷ்மி :**

**ஜயஜய துர்கதிநாசினி காமிநி ஸர்வ**
**பல ப்ரத சாஸ்த்ரமயே**
**ரதகஜ துரக பதாதி ஸ மாவ்ருத பரி**
**ஜன மண்டித லோக நுதே**
**ஹரிஹர ப்ரும்மஸு பூஜித ஸேவித**
**தாப நிவாரணி பாதயுதே**
**ஜயஜய ஹே மதுஸூதந காமிநி கெஜ**
**லக்ஷ்மி ரூபணே பாலய மாம்.**

அஷ்டலக்ஷ்மி ஆலயத்தில் பிரதானமாக உள்ள மஹாலக்ஷ்மி சந்நிதியிலிருந்து தெற்குப் புறத்தில் மேலே செல்லும் படிக்கட்டு வழியாக சென்றுல், அங்கு முதலில் உள்ள மேல் தளத்தில் காட்சியளிக்கிறுள் ஜெய லக்ஷ்மி. இரு புறமும் யானைகள் கலசம் ஏந்தி அபிஷேகம் செய்வது போன்ற அமைப்பில் நான்கு திருக்கரங்களுடன் காட்சி அளிக்கிறுள். இருகரங்களிலும் தாமரைப் புஷ்பத்தையும், மற்றும் வரத ஹஸ்தம், அபய ஹஸ்தமுமாய் காட்சி தருகிறுள்.

**ஸந்தான லக்ஷ்மி :**

அயிகஹ வாஹிநி மோஹிநி சக்ரிணி
ராக விவர்த்திநி ஜ்ஞான மயே
குணகண வாரிதி லோக ஹிதை
ஷிணிஸ் வரஸப்த பூஷிதகானநுதே
ஸகல ஸுராஸுர தேவ முநீச்வர
மாதவ வந்தித பாதயுதே
ஜயஜயஹே மதுஸூதந காமிநி ஸந்
தான லக்ஷ்மி து பாலய மாம்.

அஷ்டாங்க விமான அமைப்பில் கட்டப்பட்டுள்ள அஷ்ட லக்ஷ்மி ஆலயத்தில், முதல் தளத்தில் முதலில் கிழக்கு நோக்கியிருக்கும் கஜலக்ஷ்மியைக் கடந்து பிரதட்சணமாகச் சென்று தென்புறம் சென்றால்-வீற்றிருந்த திருக்கோலத்தில் சேவை சாதிக்கிறாள். நல்ல குணங்களுடன் கூடிய குழந்தைகளைப் பெறும் பாக்கியத்தை அருள்பவள் ஸந்தான லக்ஷ்மி. ஸந்தானலக்ஷ்மி கத்தி, கேடயத்தை இருகரங்களிலும் மற்றும் அபய ஹஸ்தமும், வரத ஹஸ்தமுமாய் நான்கு கரங்களுடன் காட்சி தருகிறாள்.

**விஜய லக்ஷ்மி :**

ஜய கமலாஸநி ஸத்கதி தாயிநி
ஜ்ஞான விகாஸிநி கான மயே
அனுதின மர்ச்சித குங்கும தூஸர
பூஷித வாஸித வாத்யனுதே
கனகதாரா ஸ்துதி வைபவ வந்தித
சங்கர தேசிக மான்யபதே
ஜயஜயஹே மதுஸூதந காமிநி விஜய
லக்ஷ்மி ஸதா பாலய மாம்.

அஷ்டலக்ஷ்மி ஆலயத்தில் மேல் தளத்தில் தெற்கு நோக்கியிருக்கும் ஸந்தான லக்ஷ்மியை சேவித்துவிட்டு பிரதட்சணமாக வந்தால் மேற்கு நோக்கி சந்நிதி கொண்டு திகழ்கிறாள் விஜயலக்ஷ்மி. நற்காரியங்கள் எல்லாவற்றிலும் நமக்கு வெற்றி கிடைக்க விஜயலக்ஷ்மியின் அருள் வேண்டும். தொழும் பக்தர்கள் அனைவருக்கும் ஜெயத்தைத் தரும் தேவி எட்டு புஜங்களுடன் காட்சி தருகிறாள். சங்கு, சக்கரம், வில், அம்பு, கேடயம், கத்தி முதலியவற்றை ஏந்தியும், மேலும் அபய ஹஸ்தம், வரத ஹஸ்தமுமாய் காட்சி தருகிறாள்.

**வித்யா லக்ஷ்மி :**

ப்ரணத ஸுரேச்வரி! பாரதி! பார்க்கவி
சோக விநாசிநி! ரத்ன மயே
மணிமய பூஷித கர்ண விபூஷண
சாந்தி ஸமாவ்ருத ஹாஸ்யமுகே
நவநிதி தாயிநி கலிமல ஹாரிணி
காமித பலப்ரத ஹஸ்த யுதே
ஜயஜயஹே மதுஸூதந காமிநி வித்யா
லக்ஷ்மி ஸதா பாலய மாம்.

கல்விக்கு அதிபதியாய் விளங்கும் தேவி சரஸ்வதி என்பது யாவரும் அறிந்ததே. சரஸ்வதியைப் போலவே சகல வித்தைகளையும், ஞானத்தையும் வழிபடும் பக்தர்களுக்கு அருள்பவள் வித்யாலக்ஷ்மி. அஷ்டலக்ஷ்மி ஆலயத்தில் மேல் தளத்தில் பிரதட்சணமாய் வருகையில் வடக்கு திசை நோக்கி காட்சியளிக்கிறாள் வித்யா லக்ஷ்மி. தாமரை புஷ்பத்தை இரண்டு கரங்களிலும், மேலும் அபய ஹஸ்தமும், வரத ஹஸ்தமுமாய் நான்கு திருக்கரங்களுடன் காட்சி தருகிறாள் வித்யா லக்ஷ்மி.

**தன லக்ஷ்மி :**

திமிதிமி திந்திமி திந்திமி துந்துபி
நாத ஸுபூர்ணமயே
குமகும குங்கும குங்கும சங்க நி நாத
ஸுவாத்யநுதே
வேத புராணேதிஹாஸ ஸுபூஜித
வைதிக மார்க ப்ரதார்சயுதே
ஜயஜயஹே மதுஸூதந காமிநி தன
லக்ஷ்மி ரூபணே பாலய மாம்.

அஷ்டாங்க விமான ஆலயத்தில், எல்லா சந்நிதிகளையும் விட மிகவும் உயரத்தில் கிழக்கு திசை நோக்கி (கடலை நோக்கிய வண்ணம்) தன லக்ஷ்மியின் சந்நிதி இருக்கும் காரணத்தை அர்ச்சகரிடம் கேட்டபோது 'சகல மக்களுக்கும் தேவையானது தனம் ஆகும். அதனால் தனலக்ஷ்மியின் சந்நிதி மிக உயரத்தில் இருக்கிறது எனவும், கடல் தன்னுள் பல செல்வங்களை (முத்து, பவழம், மற்றவை) கொண்டுள்ளது ஆதலால் கடலை நோக்கிய வண்ணமும், மேலும் மீனவ மக்களுக்கு கடலே வாழ்வளிக்கும் செல்வமாய் விளங்குகிறது. எனவே தனலக்ஷ்மி சந்நிதி கொண்டுள்ள இடம் மிகவும் பொருத்தமான இடமாகும்' என்று மிக அழகாக விளக்கிக் கூறினர். தனலக்ஷ்மி சங்கு, சக்கரம், வில், அம்பு, அமிர்த கலசம், வெற்றிலை முதலியவற்றை ஏந்தி ஆறு திருக்கரங்களுடன் காட்சி தருகிறாள்.

**மஹா லக்ஷ்மி :**

எல்லா லக்ஷ்மிகளுக்கும் பிரதானமாக மஹாலக்ஷ்மி இருக்கையில் அஷ்ட லக்ஷ்மியாக இருக்கும் காரணத்தை கேட்ட போது, ஸ்ரீமந் நாராயணன் தசாவதாரமாய் பத்து அவதாரங்கள் எடுத்தது போல, மஹா லக்ஷ்மியும் அஷ்டலக்ஷ்மியாய் எட்டு அவதாரம் எடுத்ததாக அர்ச்சகர் அழகாக விளக்கிக் கூறினர். மேலும் அஷ்டலக்ஷ்மி ஆலயத்தில் கமல விநாயகருக்காக ஒரு சந்நிதியும், குருவாயூரப்பனுக்காக தனிச் சந்நிதியும், மேலும் ஆஞ்சநேயருக்காக தனிச் சந்நிதியும் உள்ளன. இவ்வாலயத்தில் ஆஞ்சநேயர் நின்ற திருக்கோலத்தில் ஒரு கரத்தில் கதையும் மற்றொரு கரம் பக்தர்களை ஆசீர்வதிப்பது போலவும் அழகாக அமைந்துள்ளன.

சென்னையில் உள்ள பெஸன்ட் நகர் சென்று அஷ்ட லக்ஷ்மியைத் தரிசித்து, ஸகல ஐச்வர்யமும், வாழ்வில் வெற்றியும், மனமகிழ்ச்சியையும் அருளும்படி பிரார்த்தித்து அருள் பெறுவோம் வாருங்கள்!



# வரலக்ஷ்மி விரதம்

திரு. B. சுந்தரராஜன் M.A. B.Ed.,
பழமார்னேரி.

பார்வதி தேவியும் பரமேச்வரனும் ஒரு சமயம் சதுரங்கம் விளையாடிக் கொண்டிருந்தனர். பார்வதி தேவியே வெற்றி அடைந்து வந்தாள். ஈசனே தான் வெற்றி அடைந்ததாக சாதித்து வந்தார். எனவே தம் சதுரங்க ஆட்டத்திற்கு ஒரு நடுவரை வைத்துக் கொள்ள விரும்பினர். இருவருமாக சித்திரநேமி என்பவனைத் தேர்ந்து எடுத்தனர். இவன் பரமேச்வரனுக்குக் கட்டுப்பட்டவன். எனவே பார்வதி தேவி வெற்றி பெற்ற போதும் அதைக் கண்டு கொள்ளாமல் ஈசனார் கட்சியையே ஒரு தலைப்பட்சமாக ஆதரித்து அவரை உற்சாகப்படுத்தி வந்தான்.

இந்த சூழ்ச்சியை உணர்ந்து கொண்ட பரமேசுவரி நடுநிலை தவறிய சித்திர நேமியைக் குஷ்டரோகியாக ஆகுமாறு சபித்தாள். சித்திரநேமி அறியாது தான் செய்த பிழை பொறுத்தருளுமாறு அன்னையிடம் பலவாறும் வேண்டினன். பரம சிவனும் அம்பாளிடம் சித்திரநேமியின் பொருட்டு பரிந்துரைக்கவே அன்னை மனம் இரங்கினாள். வரலக்ஷ்மி விரதம் கொண்டாடி சித்திரநேமி தன் குஷ்ட ரோகத்தைப் போக்கிக் கொள்ளலாம் என்ற சாப விமோசனமும் அளித்தாள். அவ்விதமே லக்ஷ்மிதேவியின் அருளைப் பெற்று தன் நோய் தீர்ந்தவன் சித்திரநேமி என்று புராணங்கள் கூறுகின்றன.

ஆடி மாதம் சுக்ல பக்ஷத்துக் கடைசி வெள்ளிக் கிழமையில் இந் நோன்பு கொண்டாடப்படுகிறது. தமிழ் நாட்டில் எல்லாப் பெண்களும் இதைக் கொண்டாடுவதில்லை. சில குடும்பங்களில் மட்டும் இது அனுஷ்டிக்கப்படுகின்றது. ஆந்திர, கர்நாடக மாநிலங்களில் இது மிக முக்கியமான பண்டிகையாகும். பீஹாரிலும் பரவலாகக் கொண்டாடப்படுகிறது.

இந்த விரதத்தை அனுஷ்டித்துத் தான் பார்வதிதேவி முருகனைப் பெற்றதாகவும் வரலாறு கூறும். குண்டின தேசத்து அரசகுமாரி சாருமதி என்பவள் நற்கணவனையும், புத்திரனையும் இவ்வரலக்ஷ்மி விரதத்தினால் தான் பெற்றதாகவும் பெரியோர் உரைப்பர்.

வரலக்ஷ்மி என்றால் வரங்களைக் கொடுக்கும் தாயாகிய லக்ஷ்மிதேவி எனப் பொருள்படும். அரிய இவ்வன்னை ஒருவளேதான் எட்டு உருவமாகிப் பலவித க்ஷேமங்களை அளிப்பதால் அஷ்டலக்ஷ்மி என்று அழைக்கப்படுகிறாள்.

ஸ்ரீ வரலக்ஷ்மி தேவியை இரண்டு திருக்கரங்களில் தாமரை மலர்கள், ஒரு கையில் வரத முத்திரை, மற்றொரு கையில் அபய முத்திரை உள்ளவளாகவும், தாமரை மலரில் அமர்ந்தவளாகவும், கடைக்கண் பார்வையால் நம் அபீஷ்டங்களை நிறைவேற்றுபவளாகவும், அழகிய கிரீடம், விசாலமான அகன்ற நெற்றி, அழகிய நாசி, சுருண்டகேசம், பட்டு வஸ்த்ரம், மங்கள சரணம் ஆகியவைகளுடன் இருப்பவளாக தியானிக்க வேண்டும்.

வெள்ளிக் கலசத்தில் அம்பாளின் வெள்ளி அல்லது தங்கப் பிரதிமையை வைத்துப் பூஜிக்க வேண்டும். அதற்கு முன்பு ஒரு சுமங்கலியைப் பூஜித்து வஸ்த்ரங்களையும், மங்கல வஸ்துக்களையும் அளிக்க வேண்டும். அருகம் புல்லால் அன்னையை அர்ச்சிப்பது மிகவும் விசேஷம். செந்தாமரை, வெண்தாமரை மலர்களும் பூசைக்கு இன்றியமையாதன. ஸ்ரீலக்ஷ்மிதேவிக்குரிய மூலமந்த்ரம் பின் வருமாறு.

"ஓம் ஐம் ஹ்ரீம் ஸ்ரீம் லக்ஷ்மி கமல
தாரிண்யை
ஸிம்ஹ வாஹின்யை ஸ்வாஹா"

இம்மூலமந்த்ரத்தை நாளும் பன்முறை உருவேற்றிவர அஷ்டலக்ஷ்மி கடாக்ஷமும் பெருகும். அதர்வ ரஹஸ்யம் உத்தர பாகத்தில் இம் மூலமந்த்ரமும், லக்ஷ்மி ஹ்ருதயம், லக்ஷ்மி நாராயண ஹ்ருதம் என்ற இரு அபூர்வ ஸ்தோத்ரங்களும் உள்ளன.

விகனஸ் என்ற முனிவரால் ஸ்ரீ லக்ஷ்மிதேவியின் உபாஸனா மார்க்கங்கள் வகுக்கப்பட்டன. மது, டோலன் என்ற இரு அரக்கரைக் கொன்று உலகோர் இடுக்கண் தீர்த்தவளும் இவ்வன்னையே. திருவையாறு, திருநின்றவூர், திருவாரூர், திருப்பத்தூர் ஆகிய திருத்தலங்களில் லக்ஷ்மிதேவி சிவனாரை வழிபட்டுத் தவமியற்றியதாகப் புராணங்கள் பகரும். லக்ஷ்மி தேவியை எவனொருவன் தவக்கோலத்தில் அன்னையின் திருமுடியில் சிவலிங்க வடிவமான உருத்திராக்கக் கிரீடம் அணிந்தவளாக எண்ணி உபாஸிக்கிறானோ அவன் அஷ்ட ஐச்வர்யங்களையும் பெறுவான் என்று அதர்வரஹஸ்யம் கூறுகிறது. ஸ்ரீ லக்ஷ்மி தேவியின் அருளால் இம்மை, மறுமை ஆகிய இரு செல்வங்களையும் எய்துவோமாகுக!



# உத்தமி காந்தாரி

காந்தாரி என்பவள் காந்தார தேசத்து (இப்பொழுது ஆப்கானிஸ்தானம்) அரசன் சுபலனுடைய மகள். இவளின் சகோதரன் சகுனி. இவள் ஒன்றுமறியாத இளம்பிராயத்திலேயே செய்த தவத்தை சிவன் மெச்சி அவளின் விருப்பப்படி பலம் மிக்க நூறு பிள்ளைகள் கிடைக்குமாறு வரம் தந்தார்.

பீஷ்மர் திருதராஷ்டிரனுக்குப் பெண் தேடும்போது காந்தாரியின் வரம் பற்றிய செய்தியை அறிந்து சுபலனிடம் பெண் கேட்கிறார். குருடனுக்குப் பெண் தர மாட்டேன் என்று சுபலன் மறுக்கிறான். ஆனால் சுயநலமும் தந்திரமும் உடைய சகுனி இதனால் தன் வாழ்வு உயரும் என நினைக்கிறான். நம் சகோதரியின் கணவன் குருடனாயிருந்தால் அவனைக் கைக்குள் போட்டுக் கொண்டு நாமே அதிகாரம் செலுத்தலாம் என நினைக்கின்றான். அதனால் பெற்றோரைச் சம்மதிக்கச் செய்து காந்தாரியைத் தானே அஸ்தினபுரத்துக்கு அழைத்துச்சென்று திருதராஷ்டிரனுக்கு மணமுடிக்கிறான்.

காந்தாரியோ மணையில் அமரும் முன் தானே தன் கண்ணைக் கட்டிக் கொண்டாள், கணவருக்கு இல்லாத கண் எனக்கேன்? அவர் காணாத இன்பக் காட்சிகள் எனக்கும் வேண்டாம் என்ற உயர்ந்த எண்ணத்தால். தன் மக்கள் போர்க்களத்தில் இறந்து கிடக்கும் போது அவர்களுடைய உருவத்தைக் காணும் ஆசைக்குக் கூட மனத்தில் இடந்தரவில்லை.

அவள் கணவனுக்காக வெளிப் பார்வையை இழந்தாலும் மனக்கண் ஒளியுடனேயே இருந்தது. அஸ்தினபுரத்துக்கு கண்ணன் வந்தபோது பாண்டவர்களுக்கு ஒரு ஊசி முனை அளவு நிலம்கூட தரமாட்டேன் என்று துரியோதனன் மறுக்கிறான். காந்தாரியிடம் கேட்கிறான் திருதராஷ்டிரன். காந்தாரி, முறைப்படி ராஜ்ஜியம் பாண்டுவைச் சேர்ந்ததாதலால் அவரது புதல்வர்களான பாண்டவர்களுக்கே உரியது என்று கூறுகின்றாள். தருமர் மனமிரங்கி ஏதாவது கொடுத்தால் கௌரவர்களுக்கு உண்டு என்றும் சொன்னாள். அவள் பேச்சில் நீதி, நியாயம், கட்டுப்பாடு முதலியன ஒளி வீசுகின்றன.

பாண்டவர்களும் காந்தாரியின் பேச்சில் நம்பிக்கை உள்ளவர்கள். அவள் சொன்னால் மீண்டும் வனவாசம் போகவும் தயாராயிருந்தனர். கண்ணனிடம் அவர்கள் காந்தாரி என்ன சொன்னால் என்றுதான் கேட்டனர்.

திரௌபதியை சபையில் மானபங்கம் செய்ய துரியோதனனும் தம்பியரும் முயன்றபோது 'குலத்தைக் கெடுக்க வந்த கோடாலிக் காம்பான அவனை விரட்டியடியுங்கள். அதனால் நன்மை உண்டாகும்' என்று தன் மகனையே கூறுகின்றாள்.

போரின் முதல் நாள் துரியோதனன் தன் தாயிடம் வந்து அவள் காலில் விழுந்து 'அம்மா, உன் ஒரு சொல்லால் நாங்கள் வெற்றியடைவோம். எங்களுக்கு ஜெயம் உண்டாகும்படி ஆசீர்வாதம் செய்' என்று கெஞ்சுகிறான். ஒரு புறம் நீதியும் நேர்மையும் இழுக்கின்றன. முடிவில் 'எங்கே தர்மம் இருக்கிறதோ அங்கே வெற்றி' என்று கூறுகிறாள். கடைசி நாள் போர் வரையிலும் அவனுக்கு இதே பதிலையே கூறுகின்றாள்.

தன்னுடைய நூறு புதல்வர்களையும் கொன்ற பாண்டவர்களுடைய மனைவியான திரௌபதி இளம் பாண்டவர்களை இழந்து அழும்போது 'என் நூறு பிள்ளைகளும் இறக்கவில்லையா, என்னைப் பார்த்து நீயும் தேறிக்கொள்' என்கிறாள். திரௌபதி ஓரளவு ஆறுதல் அடைகிறாள்.

---

திரு. கு. தமிழ்ச் செல்வி-சிதம்பரம்.

---

போருக்குப் பின் பாண்டவர்கள் காந்தாரியைச் சந்தித்து வணங்குகின்றனர். அப்போது அவளின் பார்வையின் ஒரு கிரணம் எப்படியோ தப்பி வந்து தருமரின் கால் நகங்களைச் சுடுகின்றது. அதுகண்ட அர்ஜுனன் நடுங்கிப்போய் கண்ணனுக்குப்பின் ஒளிந்து கொள்கிறான். ஒரு கிரணம் பட்டதற்கே அப்படியென்றால் அவள் தன் முழு கண்ணையும் திறந்து பார்த்திருந்தால் பாண்டவர்கள் அக்கணமே பஸ்பமாகியிருப்பர்.

இவள் வயிற்றில் துஷ்டர்களான துரியோதனன் போன்றோர் பிறக்காதிருந்தால் சீதை, சாவித்திரி, நளாயினி முதலியோரைப் போல் அதிகாலையில் உலகம் தொழும் நிலையைக் காந்தாரி பெற்றிருப்பாள்.

★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

